

விஜயவாடாவில் 2–3–79 அன்று, தி. தி. தேவஸதானத்தாரின் தகவலறிவிப்பு நிலேயத்தினே, ஆந்திர மாநில அறநிலேய அமைச்சர் திரு. வி. வெங்கட நாராயணு அவர்கள் திறந்துவைத்தார்.



தி. தி. தேவஸ்தான செயலாட்சித் தலே வர் திரு. பி. வி. ஆர். கே. பிரஸாத் அவர்கள் 11–3–79 அன்று பெங்க ளூரில் திரு. ராள்ளபள்ளி அனந்த கிருஷ்ணசர்மா அவர்களுக்கு 'தேவஸ் தானஆஸ்தான சங்கீத சாகித்யவித்வான்' எனும் பட்டம் அளித்து கௌரவித்தார்.



திருபபதியில, தி. தி. தேவஸதான நிரு வாக அலுவலகக் கட்டடத்தில ஆந்திரா வஙகியின் கிளே ஒன்று, 19-3–79 அன்று தி. தி தே. செயலாட்சித் தலேவர் திரு. பி. வி. ஆர். கே பிரஸாத் அவர்களால் திறந்து வைக்கப்பட்டது.



ராமசந்துருடிதடு ரகுவீரடு
காமித பலமுலிய்ய கலிகெ நிந்தரிகி

கௌதமு பார்ய பாலிடி காமதேனுவிதடு
காதல கௌசிகு பாலி விருக்ஷமு
சீதாதேவி பாலிடி சிந்தாமணீதடு
ஈதடு தாஸுல பாலி இஹபர தெய்வமு

பரக சுக்ரீவு பாலி பரம பந்துடிதடு
சரி ஹநுமந்து பாலி சாம்ராஜ்யமு
நிரதி விபீஷணனி பாலி நிதானமு
கரிம ஜனகுபாலி கனபாரிஜாதமு

தலப சபரி பாலி தத்வபு ரஹஸ்யமு
அலரி குகனி பாலி ஆதிமூலமு
கலடன்ன வாரி பாலி கண்ணுலெதுடி மூரிதி
வெலய ஸ்ரீவேங்கடாத்ரி விபுடிதடு

*அன்னமாச்சார்யாவின் அத்யாத்ம சங்கீர்த்தனைகள்-147-X.*

*[ராமச்சந்திரன் எனும்இவன் ரகுவம்சத்து வீரன்; எல்லோருக்கும் வேண்டிய நலன்களை வழங்கவே இவன் பிறந்தான்; கல்லாயிருந்த தனக்கு மீண்டும் மனித உருவம் அளித்ததால் கௌதமனின் மனைவியான அகலிகைக்கு இவன் காமதேனு; சிறியவனாக இருந்தாலும் அரக்கர்களைக் கொன்று தன்னுடைய வேள்வியைக் காத்ததனால் கௌசிகனுக்கு இவன் கல்பவிருக்ஷம்; சீதையின் பெருமையை உலகு அறியும்வகையில் அவளை மணம் செய்துகொண்டதால் சீதைக்கு அவன் சிந்தாமணி; தன்னை வழிபடும் உலகிலுள்ள பக்தர்களுக்கு இம்மை மறுமை பேறுகளை வழங்கிடும் கண்கண்ட தெய்வம் இவன்; எல்லா நலன்களையும் அளித்ததால் சுக்ரீவனுக்கு நெருங்கிய உறவினன் இவன்; இரு உலக இன்பத்தையும் நாடா அனுமந்தனுக்குப் மாபெரும் சாம்ராஜ்யம் இவன்; ராவணனைக் கொன்று தனக்கு நாடளித்ததால் விபீஷணனுக்குப் மாபெரும் புதையல் இவன; தன் மருகனாகத் திகழ்ந்து எல்லையில்லா ஆனந்தத்தை வழங்கியதால் பிரம்ம ஞானியான ஜனகனுக்கு பாரிஜாத மலர் இவன்; மோட்சம் அளித்ததனால் சபரிக்கு இவன் தத்துவ ரகசியமாக விளங்கினான்; கங்கை நதியினைக் கடக்க படகு கொண்டு உதவி புரிய நேர்ந்ததனால் குகனுக்கு இவன் பரம்பொருளாகத் திகழ்ந்தான்; கடவுள் உள்ளான் என்போர்க்குக் கண்ணெதிரில் விளங்கும் மூர்த்தியாகக் கருதப் பட்டான்; இறுதியாகப் பார்க்கின் இவன், திருமலையில் நின்றவண்ணம் அருள்புரியும் அவ்வேங்கட வனேயாவான்.]*




# ஸப்தகிரி

ஏப்ரல் 1979

மலர்: 9 இதழ் 11



தனிப்பிரதி 50 காசு.
வருடச் சந்தா ரூ. 6

சிறப்பாசிரியர்:
திரு. பி. வி. ஆர். கே. பிரஸாத்,
I.A.S,
செயலாட்சித்தலைவர்,
தி. தி. தேவஸ்தானம், திருப்பதி.

ஆசிரியர்:
திரு. கே. சுப்பாராவ், எம். ஏ.
தி. தி. தேவஸ்தானம்,
திருப்பதி.

அச்சிடுபவர்:
திரு. எம். விஜயகுமார் ரெட்டி,
மேலாளர்,
தி. தி. தேவஸ்தான அச்சகம்,
திருப்பதி.

முழு விவரங்களுக்கு,
Marketing Officer,
Publication Section,
T. T. D. Press Compound,
TIRUPATI-517501.

## உள்ளுறை



அட்டைப் படம்: ஸ்ரீ வேதநாராயண சுவாமி - நாகலாபுரம் (ஊஞ்சல் சேவை-பிரம்மோற்சவம்).

# ஆசிரியர் உரை

இயற்கையின் பின்னணியில் இறைவனைக்கண்ட இந்தியன் அவ்இயற்கையை ஆராதிக்கும் வகையில் இறைவனுக்கு ஒருருவம் சமைத்து வழிபட ஆரம்பித்தான். அவ்வுருவ வழிபாடே இறைமைப் பண்புகளை அடைதற்கான முதல் படியாக அமைந்தது. ஆம், 'விக்ஷேப தோஷம்' எனப்படும் உறுதியற்ற, மாறுதல்களுக்கு ஆட்படுகின்ற தன்மைக் கூறுகளுடன் கூடிய மனதினை அடக்கி, ஒருமையுடன் இறைவனை வழிபட, அன்றுட வாழ்க்கைப் பிரச்சனைகளுடன் போராடிக் கொண்டிருக்கும் இக்கலியுக மனிதனுக்கு, இவ்விக்ரக வழிபாடு உதவியாக அமைந்தது. இதன் விளைவாக ''கோயிலில்லா ஊரில் குடியிருக்க வேண்டா'' எனும் முதுமொழி ஏற்படும் அளவிற்கு, ஊர்தோறும் மன்னர்களாலும், மக்களாலும் கோயில்கள் பல கட்டப்பட்டன. அக்கோயில்கள் உள்ள தலங்கள் யாத்திரைத் தலங்களாக அழைக்கப்பட்டாலும், குறிப்பிட்ட சில கோயில்களே நாட்டின் பல பகுதியினரைக் கவரும் வகையில் விளங்கி வருகின்றன. அவற்றில் திருமலை ஸ்ரீ வேங்கடேஸ்வர சுவாமி கோயில் முதலிடம் வகிக்கின்றது எனின், அதற்குக் காரணம் அக்கோயில் தன்னகத்தே, தனக்கே உரிய சரித்திரப் பெருமையும், இலக்கியச் சிறப்பினையும், சமயப் புகழினையும் கொண்டு விளங்குவதுதான். அதனுல்தான் திருமலையில் நின்றவண்ணம் அருள் மழையினைப் பொழியும் அவ்வேங்கடவனை வடவா தென்னவர் பாகுபாடின்றி, சமயப் பிரிவின்றி, சமுதாய வேற்றுமையின்றி நாள்தோறும் ஆயிரக்கணக்கான யாத்திரிகப் பொதுமக்கள், தரிசித்து, எழுத்தில் வடிக்கவியலா உணரனுபவத்துடன் ஊர் திரும்புகின்றனர். இது மட்டுமா. கால் கடுக்க பல மணி நேரங்கள் திருமலை பேருந்துக்காகவும், திருமலையில் தங்கு வசதிகளுக்காகவும், இறைவனின் தரிசனத்திற்காகவும் 'க்யூ' வில் நின்று, 'வாழ்வே க்யூ மயம்' தானே எனும் அளவிற்கு அவர்கள் அனுபவம் பெற்றாலும், மறுபடியும் வாய்ப்பு கிடைத்தால் திருமலைக்குச் சென்று இறைவனை தரிசிக்கவே விரும்புவது, அவ்வேங்கடவனின் தனிச் சிறப்பிற்கு சிறந்த உதாரணமாகும். மேலும் ஏழுமலையானின் தனிப்புகழ் கடல் கடந்து மேலைநாட்டாரையும், கீழை நாட்டாரையும் கவர்ந்திழுத்துள்ளது என்பதற்கு, அமெரிக்காவில் கட்டப்பட்டுள்ள ஸ்ரீ வேங்கடேஸ்வர சுவாமி கோயிலும், அண்மையில் நேபாளம் மற்றும் இலங்கை நாட்டுத் தலைவர்கள் பலர் திருமலைக்கு வருகை புரிந்ததும் சிறந்த எடுத்துக்காட்டுக்களாம். இத்தகு பெருமையும் புகழையும் கொண்டுள்ள இத்திருமலைக் கோயிலைப் பராமரித்து வரும் திருமலை திருப்பதி தேவஸ்தானம் அண்மைக் காலமாகவே 'காய்த்த மரம் கல்லடிபடும்' எனும் வகையில் பல விமர்சனங்களுக்கு உட்பட்டு வருகின்றது. இதனைப்பற்றி, சென்ற முன் இதழிலேயே ஆசிரியர் உரையில் எழுதப்பட்டிருந்தாலும் தேவஸ்தானம் அண்மையில் யாத்திரிகர்களுக்கு உதவும் வகையில் மேற்கொண்ட முயற்சிகளை வாசகர்களுக்குத் தெரிவிப்பதனை 'ஸப்தகிரி' தன் கடமையாகக் கருதுகின்றது.

நாளும் விழாக் கோலம் பூணும் திருமலைக்கு வருகை புரியும் யாத்திரிகர்களும், கோயிலின வருவாய் ஆண்டு தோறும் உயருதற்குக் காரணமான யாத்திரிகர்களுக்கு உதவும் வகையில் முயற்சிகள் பல எடுத்துக்கொண்டு வரும் தேவஸ்தானமும் எதிர்கொள்ளும் பொதுப் பிரச்சனை 'ஸர்வ தரிசனம்' பற்றியதுதான். அப்பிரச்சனையை ஓரளவு குறைக்க தேவஸ்தானம் சில வழிமுறைகள் கையாண்டுள்ளது. நாளும் நடைபெறுதற்கான சில வைதிக சமய வழிபாடு முறைகளுக்காக சில மணி நேர இடைவெளியைத் தவிர்த்து, தினந்தோறும் காலை 6 மணி முதல் நள்ளிரவு 12 மணி வரை 'ஸர்வ தரிசன' வசதி மேற்கொள்ளப்பட்டு, இதனுல் மேலும் பல ஆயிரக்கணக்கான யாத்திரிகர்களுக்குத் தரிசன வசதி கிடைக்க வழி செய்யப்பட்டுள்ளது. மேலும் உடல்நிலை காரணமாகவோ அல்லது வேற்று காரணங்கள் முன்னிட்டோ 'ஸர்வ தரிசன' க்யூவில் வெகு நேரம் காத்திருக்க முடியா. யாத்திரிகர்களுக்கு உதவும் வகையில் விரைவான தரிசன வசதி பெறுதற்கான சிறப்பு தரிசன டிக்கெட்டுகள் விற்கப்பட்டு வருகின்றன. இச்சிறப்பு தரிசன டிக்கெட்டுகள், திருமலையில் மட்டுமின்றி, நாட்டின் பல்வேறு பகுதிகளிலிருந்து வரும் யாத்திரிகர்களுக்கு உதவும் வகையில், நாட்டிலுள்ள குறிப்பிட்ட ஆந்திரா வங்கியின் கிளை அலுவலகங்கள் மூலம் விற்க முயற்சி எடுக்கப்பட்டு, தற்போது செயற்படுத்தப்பட்டும் வருகிறது. இதனுல் அச்சிறப்பு தரிசன டிக்கெட்டுகளை வாங்க வரும் யாத்திரிகர்கள் திருமலையில் தங்குவது ஓரளவு தவிர்க்கப்படுவதால், திருமலைக்கு வரும் மற்றைய நூற்றுக்கணக்கான யாத்திரிகர்களுக்கு தங்கு வசதிகள் எளிமையாக கிடைக்க வாய்ப்பேற்படுகின்றது. ஒரு குறிப்பிட்ட எண்ணிக்கையினைக் கொண்ட யாத்திரிகர்களை மட்டுமே அனுமதிக்கும்படியான சேவானந்தர தரிசன டிக்கெட் விற்பனை நிறுத்தப்பட்டிருப்பதால், இச்சேவைகள் காலை 6 மணிக்கு முன்பே முடிக்கப்பட்டு, ஸர்வ தரிசனம் அனுமதிக்கப்படுவதால், மேலும் பல ஆயிரக்கணக்கான யாத்திரிகர்களுக்குத் தரிசன வசதி கிடைக்கின்றது.

இது மட்டுமின்றி, கால் நடையாக திருமலைக்கு வந்து, குறைந்த பட்சம் இரண்டு மூன்று மணி நேரங்களாவது ஸர்வ தரிசன 'க்யூ'வில் நிற்பதைத் தவிர்க்க முடியா யாத்திரிகப் பொதுமக்களுக்கு உதவும் வகையில், திருப்பதி அலிபிரி (மலையடி வாரம்)யிலிருந்து திருமலை வரை அவர்களுடைய சாமான்களை இலவசமாக எடுத்துச் செல்ல, தி. தி. தேவஸ்தானம் தகுந்த ஏற்பாடுகளை மேற்கொண்டுள்ளது. தவிர, அவர்களுக்கு மேலும் உதவும் விதத்தில், திருமலைக்குச் செல்லும் பாதையில் முதலுதவி நிலையங்கள் திறக்கப்பட்டுள்ளன.

எனவே இது போன்று அவ்வப்போது, தி. தி. தேவஸ்தான ஊழியர்களின் வாழ்க்கைக்கு உயிர் நாடியாக விளங்கும் யாத்திரிகர்களின் நன்மைக்காக, திருமலை திருப்பதி தேவஸ்தானம் மேற்கொண்டு வரும் முயற்சிகளை, பணிகளை, குறை கூறுபவர்களும் குற்றம் காணுபவர்களும் சற்றே எண்ணிப்பார்த்தால், அதுவே, 'மக்கள் சேவையே மகேசன் சேவை' என்ற உயர்ந்த கோட்பாட்டினை செயலில் கடைப்பிடித்துவரும் தேவஸ்தானத்திற்கு அவர்கள் வழங்கும் பேருதவியாக அமையும்.






# ஸப்தகிரி

ஏப்ரல் 1979

மலர்: 9 இதழ் 11

தனிப்பிரதி 50 காசு.
வருடச் சந்தா ரூ. 6

சிறப்பாசிரியர்:
திரு. பி. வி. ஆர். கே. பிரஸாத், I.A.S.,
செயலாட்சித்தலைவர்,
தி. தி. தேவஸ்தானம், திருப்பதி.

ஆசிரியர்:
திரு. கே. சுப்பாராவ், எம். ஏ.
தி. தி. தேவஸ்தானம்,
திருப்பதி.

அச்சிடுபவர்:
திரு. எம. விஜயகுமார் ரெட்டி,
மேலாளர்,
தி. தி. தேவஸ்தான அச்சகம்,
திருப்பதி.

முழு விவரங்களுக்கு,
Marketing Officer,
Publication Section,
T. T. D. Press Compound,
TIRUPATI-517501.

## உள்ளுறை



அட்டைப் படம்: ஸ்ரீ வேதநாராயண சுவாமி - நாகலாபுரம் (ஊஞ்சல் சேவை-பிரம்மோற்சவம்).

# ஆசிரியர் உரை

இயற்கையின் பின்னணியில் இறைவனைக்கண்ட இந்தியன் அவ்இயற்கையை ஆராதிக்கும் வகையில் இறைவனுக்கு ஒருருவம் சமைத்து வழிபட ஆரம்பித்தான். அவ்வுருவ வழிபாடே இறைமைப் பண்புகளை அடைதற்கான முதல் படியாக அமைந்தது. ஆம், 'விக்ஷேப தோஷம்' எனப்படும் உறுதியற்ற, மாறுதல்களுக்கு ஆட்படுகின்ற தன்மைக் கூறுகளுடன் கூடிய மனதினை அடக்கி, ஒருமையுடன் இறைவனை வழிபட, அன்றாட வாழ்க்கைப் பிரச்சனைகளுடன் போராடிக் கொண்டிருக்கும் இக்கலியுக மனிதனுக்கு, இவ்விக்ரக வழிபாடு உதவியாக அமைந்தது. இதன் விளைவாக ''கோயிலில்லா ஊரில் குடியிருக்க வேண்டா'' எனும் முதுமொழி ஏற்படும் அளவிற்கு, ஊர்தோறும் மன்னர்களாலும், மக்களாலும் கோயில்கள் பல கட்டப்பட்டன. அக்கோயில்கள் உள்ள தலங்கள் யாத்திரைத் தலங்களாக அழைக்கப்பட்டாலும், குறிப்பிட்ட சில கோயில்களே நாட்டின் பல பகுதியினரைக் கவரும் வகையில் விளங்கி வருகின்றன. அவற்றில் திருமலை ஸ்ரீ வேங்கடேஸ்வர சுவாமி கோயில் முதலிடம் வகிக்கின்றது எனின், அதற்குக் காரணம் அக்கோயில் தன்னகத்தே, தனக்கே உரிய சரித்திரப் பெருமையும், இலக்கியச் சிறப்பினையும், சமயப் புகழினையும் கொண்டு விளங்குவதுதான். அதனால்தான் திருமலையில் நின்றவண்ணம் அருள் மழையினைப் பொழியும் அவ்வேங்கடவனை வடவர் தென்னவர் பாகுபாடின்றி, சமயப் பிரிவின்றி, சமுதாய வேற்றுமையின்றி நாள்தோறும் ஆயிரக்கணக்கான யாத்திரிகப் பொதுமக்கள், தரிசித்து, எழுத்தில் வடிக்கவியலா உணரனுபவத்துடன் ஊர் திரும்புகின்றனர். இது மட்டுமா. கால கடுக்க பல மணி நேரங்கள் திருமலை பேருந்துக்காகவும், திருமலையில் தங்கு வசதிகளுக்காகவும், இறைவனின் தரிசனத்திற்காகவும் 'க்யூ' வில் நின்று, 'வாழ்வே க்யூ மயம்' தானே எனும் அளவிற்கு அவர்கள் அனுபவம் பெற்றாலும், மறுபடியும் வாய்ப்பு கிடைத்தால் திருமலைக்குச் சென்று இறைவனை தரிசிக்கவே விரும்புவது, அவ்வேங்கடவனின் தனிச் சிறப்பிற்கு சிறந்த உதாரணமாகும். மேலும் ஏழுமலையானின் தனிப்புகழ் கடல் கடந்து மேலைநாட்டாரையும், கீழை நாட்டாரையும் கவர்ந்திழுத்துள்ளது என்பதற்கு, அமெரிக்காவில் கட்டப்பட்டுள்ள ஸ்ரீ வேங்கடேஸ்வர சுவாமி கோயிலும், அண்மையில் நேபாளம் மற்றும் இலங்கை நாட்டுத் தலைவர்கள் பலர் திருமலைக்கு வருகை புரிந்ததும் சிறந்த எடுத்துக்காட்டுக்களாம். இத்தகு பெருமையும் புகழையும் கொண்டுள்ள இத்திருமலைக் கோயிலைப் பராமரித்து வரும் திருமலை திருப்பதி தேவஸ்தானம் அண்மைக் காலமாகவே 'காய்த்த மரம் கல்லடிபடும்' எனும் வகையில் பல விமர்சனங்களுக்கு உட்பட்டு வருகின்றது. இதனைப்பற்றி, சென்ற முன் இதழிலேயே ஆசிரியர் உரையில் எழுதப்பட்டிருந்தாலும் தேவஸ்தானம் அண்மையில் யாத்திரிகர்களுக்கு உதவும் வகையில் மேற்கொண்ட முயற்சிகளை வாசகர்களுக்குத் தெரிவிப்பதனை 'ஸப்தகிரி' தன் கடமையாகக் கருதுகின்றது.

நாளும் விழாக் கோலம் பூணும் திருமலைக்கு வருகை புரியும் யாத்திரிகர்களும், கோயிலின் வருவாய் ஆண்டுதோறும் உயருதற்குக் காரணமான யாத்திரிகர்களுக்கு உதவும் வகையில் முயற்சிகள் பல எடுத்துக்கொண்டு வரும் தேவஸ்தானமும் எதிர்கொள்ளும் பொதுப் பிரச்சனை 'ஸர்வ தரிசனம்' பற்றியதுதான். அப்பிரச்சனையை ஓரளவு குறைக்க தேவஸ்தானம் சில வழிமுறைகள் கையாண்டுள்ளது. நாளும் நடைபெறுதற்கான சில வைதீக சமய வழிபாடு முறைகளுக்காக சில மணி நேர இடைவெளியைத் தவிர்த்து, தினந்தோறும் காலை 6 மணி முதல் நள்ளிரவு 12 மணி வரை 'ஸர்வ தரிசன' வசதி மேற்கொள்ளப்பட்டு, இதனால் மேலும் பல ஆயிரக்கணக்கான யாத்திரிகர்களுக்குத் தரிசன வசதி கிடைக்க வழி செய்யப்பட்டுள்ளது. மேலும் உடல்நிலை காரணமாகவோ அல்லது வேற்று காரணங்கள் முன்னிட்டோ 'ஸர்வ தரிசன' க்யூவில் வெகு நேரம் காத்திருக்க முடியா யாத்திரிகர்களுக்கு உதவும் வகையில் விரைவான தரிசன வசதி பெறுதற்கான சிறப்பு தரிசன டிக்கெட்டுகள் விற்கப்பட்டு வருகின்றன. இச்சிறப்பு தரிசன டிக்கெட்டுகள், திருமலையில் மட்டுமின்றி, நாட்டின் பல்வேறு பகுதிகளிலிருந்து வரும் யாத்திரிகர்களுக்கு உதவும் வகையில், நாட்டிலுள்ள குறிப்பிட்ட ஆந்திரா வங்கியின் கிளை அலுவலகங்கள் மூலம் விற்க முயற்சி எடுக்கப்பட்டு, தற்போது செயற்படுத்தப்பட்டும் வருகிறது. இதனால் அச்சிறப்பு தரிசன டிக்கெட்டுகளை வாங்க வரும் யாத்திரிகர்கள் திருமலையில் தங்குவது ஓரளவு தவிர்க்கப்படுவதால், திருமலைக்கு வரும் மற்றைய நூற்றுக்கணக்கான யாத்திரிகர்களுக்கு தங்கு வசதிகள் எளிமையாக கிடைக்க வாய்ப்பேற்படுகின்றது. ஒரு குறிப்பிட்ட எண்ணிக்கையினைக் கொண்ட யாத்திரிகர்களை மட்டுமே அனுமதிக்கும்படியான சேவானந்தர தரிசன டிக்கெட் விற்பனை நிறுத்தப்பட்டிருப்பதால, இச்சேவைகள் காலை 6 மணிக்கு முன்பே முடிக்கப்பட்டு, ஸர்வ தரிசனம் அனுமதிக்கப்படுவதால், மேலும் பல ஆயிரக்கணக்கான யாத்திரிகர்களுக்குத் தரிசன வசதி கிடைக்கின்றது.

இது மட்டுமின்றி, கால் நடையாக திருமலைக்கு வந்து, குறைந்த பட்சம் இரண்டு மூன்று மணி நேரங்களாவது ஸர்வ தரிசன 'க்யூ'வில் நிற்பதைத் தவிர்க்க முடியா யாத்திரிகப் பொதுமக்களுக்கு உதவும் வகையில், திருப்பதி அலிபிரி (மலையடி வாரம்)யிலிருந்து திருமலை வரை அவர்களுடைய சாமான்களை இலவசமாக எடுத்துச்செல்ல, தி. தி. தேவஸ்தானம் தகுந்த ஏற்பாடுகளை மேற்கொண்டுள்ளது. தவிர, அவர்களுக்கு மேலும் உதவும் விதத்தில், திருமலைக்குச் செல்லும் பாதையில் முதலுதவி நிலையங்கள் திறக்கப்பட்டுள்ளன.

எனவே இது போன்று அவ்வப்போது, தி. தி. தேவஸ்தான ஊழியர்களின் வாழ்க்கைக்கு உயிர் நாடியாக விளங்கும் யாத்திரிகர்களின் நன்மைக்காக, திருமலை திருப்பதி தேவஸ்தானம் மேற்கொண்டு வரும் முயற்சிகளை, பணிகளை, குறை கூறுபவர்களும் குற்றம் காணுபவர்களும் சற்றே எண்ணிப்பார்த்தால், அதுவே, 'மக்கள் சேவையே மகேசன் சேவை' என்ற உயர்ந்த கோட்பாட்டினை செயலில் கடைப்பிடித்துவரும் தேவஸ்தானத்திற்கு அவர்கள் வழங்கும் பேருதவியாக அமையும்.

# பொறுப்பாண்மைக் குழு முடிவுகள்

(13-2-79 அன்று திருமலையில் கூடிய குழு கூட்டத்தின்போது தீர்மானிக்கப்பட்ட சில முக்கிய முடிவுகள் பின்வருமாறு)

திருச்சானூர் ஸ்ரீ பத்மாவதி கோயிலுக்கென பாஞ்சராத்ர ஆகமத்தில் ஆஸ்தான பண்டிதர் ஒருவரை மீண்டும் நியமிப்பதெனறு குழு முடிவு செய்துள்ளது.

பல்கலைக்கழக நிதிக்குழுவின் துணையுடன் திருப்பதியில தி. தி. தேவஸ்தானத்தாரின் ஸ்ரீ வேங்கடேஸ்வரா கலைக் கல்லூரியில் உடற்பயிற்சிக் கூடம் ஒன்றினைக் கட்டுதறகு தேவஸ்தானத்தின் பங்காக ரூ 58,994/- வழங்க குழு ஒப்புதல் அளித்துள்ளது.

நாராயணவனத்தில் திருமண மண்டபம் ஒன்றினைக் கட்டுதற்கு குழு அனுமதி அளித்துள்ளது.

திருமலையில் 'க்யூ' மேற்பார்வையாளராக பணிபுரியும் திரு. எம். தியாகராஜுலு என்னும் தேவஸ்தான ஊழியர், தான் கண்டெடுத்த ரூ. 50/-ஐ உரியவரிடம் சேர்ப்பிதத அவருடைய நேர்மையைப் பாராட்டும் வகையில் அவருக்கு ஊக்க ஊதியமாக ரூ. 25/- வழங்க குழு முடிவு செய்துள்ளது.

திருமலை ஸ்ரீ வேங்கடேஸ்வர சுவாமி கோயில உண்டி மூலமாக கிடைக்கப் பெற்ற விலையுயர்ந்த கற்களுடன் அலலது கற்களன்றி இருக்கும் தங்கஆபரணங்கள், தனித்து இருக்கும் கற்கள், முத்துக்கள், பவழங்கள் போன்றவற்றை ஹைதராபாத்தில் பொது ஏலத்தில் விடுவதென்று குழு முடிவு செய்துள்ளது. ஏலம் விடும் தேதி பின்னர் பத்திரிகைகள் மூலமாக தெரிவிக்கப்படும்.

அன்னமாச்சார்யா கீர்த்தனைகள் சம்மந்தப்பட்ட வெளியீடுகளை பிரசுரிப்பதற்காக புதிய அச்செழுத்துக்களை வாங்குவதற்காக குழு ரூ. 90,000 ஒதுக்கியுள்ளது.

சமய நூல்களை விரைவில் அச்சிட்டு வெளியிடுவதற்காக ரூ. 2 லட்சம் செலவில் 'மோனோ டைப்' எனும் அச்சு இயந்திரம் ஒன்றினை வாங்குவதற்கு குழு ஒப்புதல் அளித்துள்ளது.

ஹைதராபாத்திலுள்ள ஆகம சாஸ்திர மகாவித்யாலயா எனும் நிறுவனத்தை தி. தி. தேவஸ்தான மேலாண்மையின் கீழ் ஏற்றுக் கொள்வதென்று குழு தீர்மானித்துள்ளது.

ஹைதராபாத்திலுள்ள ஆந்திர அரசு அறநிலையத் துறையினரின் 'சில்ப கலா சாலா' எனும் நிறுவனத்தை தி. தி. தேவஸ்தான மேலாண்மையின் கீழ் ஏற்றுக் கொள்வதென்று குழு தீர்மானித்துள்ளது.

ஸ்ரீகாகுளம் மாவட்டம் ஸ்ரீ முகலிங்கம் எனும் இடத்தில் தேவஸ்தானத்தாரின் சத்திரம் ஒன்றினைக் கட்டுதற்கு குழு அனுமதியளித்துள்ளது.

குண்டூரில் ரமணம்மா க்ஷேத்திரத்தில வழிபாடு அரங்கு ஒன்றினை கட்டுதற்கு குழு ரூ. 50,000/- ஒதுக்கியுள்ளது.

ஆந்திராவில் அண்மையில் ஏற்பட்ட வெள்ளத்தால் தாக்கப்பெற்ற பாபட்லாவிலுள்ள பழங்குடியினர் காலனியில் கோயில ஒன்றினைக் கட்டுதற்கு ரூ. 13,000/-ஐ நன்கொடையாக வழங்க குழு அனுமதியளித்துள்ளது.

சேலம் மாவட்டம் குகையிலுள்ள 'இந்து தியோலாஜிகல்' கல்லூரியில் ஆகம சாஸ்திரத்தில் பயிற்சி வகுப்புகளை நடத்துவதற்கென, தன் உபரிநிதியிலிருந்து அக்கல்லூரிக்கு ரூ. 5,000 வழங்க குழு தீர்மானித்துள்ளது.

தி. தி. தேவஸ்தானத்தாரால் நடத்தப்படும் காது கேளாதோர், பார்வை இழந்தோர் பள்ளி, ஏழை இல்லம், பால மந்திர் ஆகிய நிறுவனங்களைச் சார்ந்த நபர்களுக்கு, தி. தி. தேவஸ்தானத்தில் வேலை வாய்ப்புகளுக்கான சலுகை அளிப்பதென்று குழு தீர்மானித்துள்ளது.

குடிவாடாவில ஏ. என். ஆர். கல்லூரியில் வழிபாடு அரங்கு ஒன்றினைக் கட்டுதற்கு குழு ஒப்புதல் அளித்துள்ளது.

கோதாவரி நதிக்கரையில் தி. தி. தேவஸ்தானத்தின் பெயரில் படித்துறை ஒன்றினை ரூ. 3 இலட்சம் செலவில் அமைப்பதற்கு குழு அனுமதி அளித்துள்ளது.

ஆந்திர மாநிலத்திலுள்ள பல்வேறு இடங்களிலுள்ள கோயில்களைப் புதுப்பித்தல் பணிகளுக்காக குழு ரூ.28,60,320 வழங்க தீர்மானித்துள்ளது.

திருமலையில் தற்போது 'உட்லாண்ட்ஸ் ஹோட்டல்' செயற்படும் கட்டிடத்தை, மறுபடியும் தி தி. தேவஸ்தானத்தாரின் வி ஐ.பி. விருந்தினர் விடுதியாக மாற்றுவதென்று குழு தீர்மானித்துள்ளது.

திருமலையில் விரைவான தரிசன வசதி, இலவச தங்கு வசதி, இலவச போக்குவரத்து வசதி ஆகியவற்றிற்குத் தகுதியாகக் கருதப்படும் பல்வேறு மடங்களைச் சார்ந்த சுவாமிகளின் பெயர்ப்பட்டியலைத் தயாரிக்கும் உரிமையை, குழு தி. தி. தே. செயலாட்சித் தலைவருக்கு வழங்கியுள்ளது.

## *சந்தாதாரர்களுக்கு...*

*31-5-79-ம் தேதியுடன் சந்தாக் காலம் முடிவடையும் சந்தாதாரர்களின் எண்கள் கீழே கொடுக்கப்பட்டுள்ளன. ஆகவே அவ்வெண்கள் உடைய சந்தாதாரர்கள் தங்கள் சந்தா எண்களைக் குறித்துக கொண்டு தாங்கள் செலுத்த வேண்டிய தொகையைச் செலுத்தி தங்கள் சந்தாவைப் புதுப்பித்துக் கொள்ளவும்.* T

*19, 49, 78, 81, 86, 191, 204, 213, 240, 244, 257, 265, 293, 296, 298, 303, 470, 503, 504, 509, 784, 819, 1152, 1155, 1165, 1187, 1190, 1192, 1196, 1198, 1199, 1202, 1214, 1393, 1600, 1733, 1847, 1868, 1880, 1881, 1882, 1884, 1889, 1890, 1892, 1894, 1895, 1896, 1899, 1907, 1910, 1914, 1915, 1922, 1924, 1928, 1930, 1932, 1933, 1934, 1936, 2664, 2665, 2667, 2668 முதல் 2673 வரை, 2675 முதல் 2678 வரை, 2680 முதல் 2716 வரை, 2718 முதல் 2725 வரை, 2727, 2729 முதல் 2737 வரை, 2756.*

# ஸ்ரீ மதுரகவி ஆழ்வாரின் தாஸத்வம்

திருமாலடியார்கள் ஆழ்வார்கள் ஆவா. ஆழ்வார்கள் திருமாலால் மயர்வற மதிநலம் அருளப் பெற்றவர் கள். மாறிமாறிப் பல பிறப்பும் கொள்ளும் உயிர்களில் மக்களாய்ப் பிறந்தவர்களுக்காக, சர்வேஸ்வரன் சாஸ்திரங்களை வெளியிட்டும், அவதா ரங்களை மேற்கொண்டும், ஜீவர்களைத் தன்னுக்கிக் கொள்ள முயன்ருன். அதில் பெரும்பலன் கிட்டவில்லை எனவே 'இணக்குப் பார்வையிட்டு மிருகம் பிடிப்பாரைப் போலே' ஸஜா தியரைக் கொண்டு ஜீவர்களைத்திருத்த எண்ணினன். அதன் பலன்தான் ஆழ் வார்களின் திருவவதாரமாயிற்று. ஆழ்வார்களில் தலைமையானவர் ஸ்வாமி நம்மாழ்வார். இவர் அவதா ரம்முதல் உலகநடைக்கு மாருகத் தியானத்திலேயே யிருந்தார். இவர், திருமாலின் மேன்மை, தாழ்ந்தவர் களிடமும் புரையறக்கலந்து பரிமாறும் நீர்மை முதலிய சீலாதி குணங்களில் ஈடுபட்டார்.

" பொய்ந்நின்ற ஞானமும் பொல்லா
வொழுக்கும் அழுக்குடம்பும்
இந்நின்ற நீர்மை இனியா முருமை "
என்று தொடங்கி,

" உறறே னுகந்து பணிசெய் துனபாதம
பெற்றேன், ஈதேயின் னம்வேண்
டுவதெந்தாய் "

என்று பிரார்த்தித்து, 'அவாவற்று வீடு பெற்ருர் குருகூர்ச் சடகோபர்'

இதற்கிடையில் ஆழ்வாருக்குப் பல ஆசைகள் இருந்தன. சர்வேஸ்வரனி டம் கொள்ளும் ஆருக்காதலின் எல்லை நிலம் பாகவத கைங்கர்யமே என்பதை யுணர்ந்தார். ஆதலால் அடியார் களின் குழுவில் உடனிருப்பதும், அவர்களுக்கு உவப்பான பணிகள் செய்யவும் விரும்பினர். ஆழ்வாரின் இநத ஆசைகளும், பகவதனுபவம் போலே மானசானுபவமேயாயிற்று. பாகவதர்களான அடியார்களே க்ஷேஷிகள் என்று அவர் அருளிய திரு வாய்மொழிகளே'பயிலுஞ்சுடரொளி' 'நெடுமாற்கடிமை' என்பன. திரு வாய்மொழி எடடாம் பத்தில 'கண கள் சிவந்து', 'கருமாணிக்கமலை', 'நெடுமாற்கடிமை' என்பன. திரு வாய்மொழி எட்டாம்பத்தில் 'கண்கள் சிவந்து', 'கருமாணிக்கமலை' 'நெடு மாற்கடிமை' என்னும் மூன்று பதிகங்கள் உள்ளன. 'கண்கள் சிவந்து' திருவாய்மொழியில் ஆழ்வார், பகவத் சம்பந்தம் ஏற்பட்டதை வெளியிட் டார். 'கருமாணிக்கமலை' யில் திரு மாலைத் தவிரத் தான் வேறு யாருக் கும் அடிமைப்பட்டவனல்லன் என்று அநந்யார்ஹ க்ஷேஷத்வத்தை வெளி யிட்டார். பின்பு நெடுமாற்கடிமை யில் திருமாலடியார்களிடம் செய்யும் அடிமையே திருமாலன்பின் எல்லை நிலம் என எணணினர்.

ஆழ்வாரின் திருவுள்ளம் ஸ்ரீ மதுர கவி ஆழ்வாருக்கே அனுஷ்டானமாக வாய்த்தது. ஸ்ரீ மதுரகவி ஆழ்வார் திருக்கோளூரில அவதரித்தார். காலத் தால ஸ்ரீ நமமாழ்வாருக்கு முற்பட்ட வர் ஆழவாருடைய அருட்கடாக்ஷத் தால் ஞானம் பெற்ருர் ஸ்ரீ மதுரகவி நம்மாழ்வார் சர்வேஸ்வரனை ஆசாரி யனுகவும், சர்வ விதபந்துவாகவும் பற்றினர். இதனை,

" ............ ........என்னைபபெறற
அத்தாயாய்த தந்தையா யறியாதன
அறிவித்த
அத்தா "

என்பதனுல் அறியலாம். இவரைப் போன்றே ஸ்ரீ மதுரகவியும் ஆழ்வா ரையே தம்தெய்வமாகவும், பிறவுமாக வும் கொண்டதை, 'அன்னையாய் அத் தனுய் என்னை ஆண்டிடும் தன்மையான் சடகோபன் என நம்பியே' என்ருர். தன் பேற்றுக்கு ஸ்ரீ சடகோபரே உபா யோபேயங்கள் எனத்தெளிந்தார். இதனை அவர் ஆழ்வாா விஷயமாக அருளிய 'கண்ணிநுண் சிறுத்தாம்பு' எனனும் பத்துப பாடல்கள் கொண்ட பிரபநதமே காட்டுகிறது. பகவத் விஷயத்தைப் பற்றிய ஆழ்வாரினும், பகவத் அடியாரான ஆழ்வாரிடம் கொண்ட ஸ்ரீமதுரகவியின் நிலையே மிகவுயர்ந்தது என்பதே இக்கட்டுரை யின் நோக்கமாகும். முதலடியான பகவானைச் சரணடைந்த ஆழ்வாருக் குக் 'கவி' என்றே பெயர் அமைநதது. இதனை அவரே, 'வாய்கொண்டு மானி டம் பாடவந்த கவியே னல்லேன்' என்கிருர். ஆனுல் ஸ்ரீசடகோபரைப் பத்துப்பாடலில் பாடியவருக்கு 'மதுர கவி' என்பது பெயர். மேலும் பக வானைச்சரணபுகுந்தவர் பேறுகிடைக்க ஆழ்வார் அளவும்-அடியார் அளவும்-வரவேண்டும். ஆனுல் ஆசார்யரைப் பற்றினர்க்குப் பேற்றில் கண்ணழி வில்லை. இங்கு ஸ்ரீதேவப்பெருமாள் திருக்கச்சி நம்பிககு ஸாதிதத வார்த் தைகளை நினைக்கவும். மேலும் 'ஆசார்யோ தேவோ பவ: எனனும சுருதி வாக்கியமும் இக்கருத்தை அணி செய்யும். 'ஆசார்யாபிமானமே உத் தாரகம்' என்னும் ஸ்ரீவசந பூஷண ஸ்ரீஷுக்திக்கு அடியும் இதுவே.


திரு. செ. முத்தப்பன்.
ஆழ்வார் திருநகரி.


ஸ்ரீமதுரகவி ஆழ்வாருடைய தாஸத் வம் ஸ்ரீராமாயணத்தில், ஸ்ரீசத்துரு ஞழ்வாருடையது என்பர் பெரியோர். சத்துருக்னன 'ஆந்த்ர' சத்துருக் களான இந்திரியங்களையும் வென்ருர். அவர் ஸ்ரீபரதாழ்வானைத் தவிர மற் ருெருவரைத் தொழாத பாரதந்த்ரி யம் உள்ளவர். அதனை ஆசார்யர்கள், 'ராம சௌந்தர்யத்துக்கு ஆட்படாத வைராக்கியமுள்ளவர்' என்பர் இத

தகைய பாகவத உத்தமரான ஸ்ரீமதுர கவி ஆழ்வாரின் க்ஷேஷத்வத்தை அவருடைய நூல்கொண்டு துணியலாம்.

ஸ்ரீமதுரகவி, ஸ்ரீசடகோபரிடம் தம் ஈடுபாட்டைச் சொல்ல வருகையில், அவர உள்ளம பறிகொடுத்து மூவாறு மாதம் மோஹித்துக் கிடந்த 'நவநீத சௌரியத்தில்' ஆழந்து பின் அது தன தாஸத்வத்துக்குக் கொத்தையாகும் என்று எணணி, ''என்னப்பனில், நணணித்தென் குருகூர் நம்பி யென்றக்கால் அண்ணிக்கும் அமுதூறும் என் நாவுக்கே'' என்கிறுர். ஆழ்வாருடைய கிருபையை அவரைப் போல திரிகரணங்களால் அல்லாமல் அவர் பெருமையை நாவினுல சொல்லியே, பகவத் விஷயத்தில் அவர் பெற்ற 'ஈறிலின்பத் திருவெள்ளமும' அரை வயிரும்படியான இன்பம் அடைந்த தாகக் கூறுகிறுர். இக, பரங்களின் பேற்றுக்காக ஆழ்வார் திருவடிகளைப் பொருந்தியதாகவும், தனக்கு ஆழ்வாரைத் தவிர வேறு தெய்வங்களைத் தெரியாது என்றும், திருக்குருகூரில் பூர்ணரான ஆழ்வாருடைய பாடலின் இனிய இசையைப் பாடியே திரிவேன் என்றும் கூறுகிறுர். ஆழ்வாருடைய திருவடிநிலே, ஊர்ப் பொதுவாக எல்லார்க்கும் அமையும் சர்வேஸ்வரன் திருவடிகளைப் போன்றதில்லேயே. 'த்ரைவித்ய வ்ருத்த ஜந மூர்த்த விபூஷண'மன்றே? ஆதலால்தான் ஸ்ரீ மதுரகவி ஐஹிஹ, ஆமுஹங்களின பொருட்டு ஆழ்வார் திருவடிகளைப் பற்றிஞர். குருகூர் நம்பி பா—திருவாய்மொழி என்றுமாம, 'கணணி நுண் சிறுத்தாம்பு' என்றுமாம். ஸ்ரீசடகோபருடைய திருவாய்மொழி பகவத் விஷயம் பற்றியதன்றே வெனின 'குருகூர்ச் சடகோபன் பாட்டு' என் பதனுல உததேஸ்யம எனறு. மேலும் 'கணணி நுண் சிறுத்தாமபு' பாடித் திரிவேன் என்பது ஸ்ரீ மதுரகவியின், மற்றெருவற்கு ஆளாகாக க்ஷேஷத்வத்தையே காட்டுகிறது.

ஸ்ரீ மதுரகவி, ஆழ்வாரைப் பற்றிய போது பகவானேயும், அவன் பெருமை சொல்லும் திருவாய்மொழியையும் விட்டு அதன் இசையே தனக்கு வாழ்வாகக்கொண்டார்எனறுபார்த்தோம். இனி இந்நிலே மாறுபட்டு விடுமாயினும், அவர் தாம் முதலில் விட்டுவந்த வழியே மீண்டு, நித்ய சூரிகளுக்குப் படிவிடும் தேவபிரானுடைய கரிய கோலத் திருமேனியை அல்லவா சேவிக்க நேரும். ஆழ்வார் உகந்த விஷயமாகையால், நித்ய சூரிகளான அடியார்களுடன் கூடிக் காண்பேன் என்கிறுர். ஆழ்வாரையும், தமிழ் மறைகளையும் உலகுக்குக் காட்டிய ஆழ்வார் திருநகரியில் பூர்ணரான ஆழ்வாரை அடைந்து நன்மையே பெற்றதாகக் கூறுகிறுர்.

''பிறர்துககம் சகியாதவர்களும், பிறருக்கு நன்மையே நாளும் எண்ணும வருமான ஸ்ரீ சீதாப்பிராட்டியார், கூரத்தாழ்வான், ஆணடாள் ஆகியோரைப் போன்ற மறை வல்லார், தம்மைப் புன்மையே வடிவாகக் கருதுவர். சர்வேஸ்வரனும் முகமபாராமல் 'க்ஷிபாமி' என வெறுத்து ஒதுக்கும் படியான அதிபாபமுடைய தன்னே ஆழ்வார் மிக்க கிருபையுடன் ஆட்கொணடார'' என நனறிப் பெருக்குடன் கூறுகிறுர் ஸ்ரீ மதுரகவி.

ஆழ்வார் கடாக்ஷத்திற்கு முன்பு, பிறருக்கு (சர்வேஸ்வரன்) உரியதான 'ஆத்மாவை', எனனுடையது என றும், தேகாத்ம வாசிகளைப் போலே—அதாவது தேகமே ஆத்மா என்று கருதுமவர் போல-தேகத்தின் உறவை விரும்பி மடவார் சுகத்தில் ஆசைப் பட்டுப் பாபியானேன் என்றும் கூறுகிறுர். இதனே வேறு விதமாகவும் உரைப்பர். உலக வாழ்வில் ஸ்ரீ மதுர கவி பற்றற்றவராகையால் இங்கு 'மடவார்' என்கிறது ஈஸ்வரனே அடைய பிற உபாயங்களைக் கொள்ளுமவர்கள் எனப்பொருள் கொணடு, உபாயாந்தரங்களில், சூர்ப்பணகாவைப் போல வழியல்லாத வழியில் செல்ல ஆசைப்பட்டதென்பர். மேலும் சுதந்தரனுன பகவானேச் சரண் புக நினேத்தேன் என்றும் தான் செய்த பாபங்களே வெளியிடுகிறுர். இதனே,

'நம்பி னேன்பிறா நன்பொருள்
தன்னேயும்,
நம்பி னேன்மட வாரையும் முன்
னெலாம்'

என்கிறுர் ஸ்ரீமதுரகவி, ஆழ்வாரால் ஆட்கொள்ளப்பட்டதால் சதுரனுனேன் என்கிறுர். ஆசார்யர்களே 'நமபி' என்கைக்கும் அவர்கள் அழைத்தால் 'அடியேன' என்கைக்கும் ஸ்ரீ மதுரகவியே முதலாவார் என்கிறுர் உரைகாரர்.

"ஆழ்வாரால் இன்று நான் எய்திய பேறு இனிக் கால தத்துவம் உள்ள வரையிலும் அமையும். பேறுவது தம் புகழைப் பாடுமாறு ஆழ்வார் செய்த உபகாரமாகும். ஆதலால் ஆழ்வார் தம்மை நெகிழ விட மாட்டார்'', என்கிறுர் உறுதியுடன். தன் குற்றத்தையே பச்சையாகக் கொணடு, அவரைப் பிரதிபத்தி பண்ண வியலாத தன்னை, ஆதரித்து தன் பாபங்களை உருமாய்ந்து போகச் செய்தார் என்கிறுர். ஆழ்வாருடைய இவ்வருட் செயலை எட்டுத்திசையிலும் பரவச் செய்வேன் என்கிறுர். மேல், கீழ்த் திசைகளில் செல்ல மாட்டாதவராகை யாலேயே திசை எட்டென்றுர்.

கேவல பகவத் பக்தியையும், தங்களுக்கு அனுகூலமான பகவத் பிரஸாதத்தைத் தவிர வேறு பகவல்லாபம் நினைத்திராதவர் இன்புறுமாறு வேதரகஸ்யமான உபநிஷத்துக்களைத் தமிழாக்கினுர். இதனை, 'மேகம் பருகின ஸமுத்ராம்பு போலே நூற்கடற் சொல் இவர் வாயனவாய்த் திருந்தின வாறே ஸர்வதா ஸர்வோப ஜீவிய மாமே' என்னும் ஆசார்ய ஹ்ருதயத் தாலும் அறிக. 'பாடினுன் அருள்' என்றது கீதாச்சார்யனை. அவன் வாய் மொழி கேட்டுத் திருந்தாத மக்களும் ஆழ்வாரின் இன்மொழி கேட்டு, 'ஊரும் நாடும் உலகமும் தன்னைப் போல் அவன் பேருந்தார்களுமே பிதற்றுமாறு' பாடினுர். ஆழ்வார் பாட்டைக் 'கேட்டாரார் வானவர்கள் செவிக்கினிய செஞ்சொல்' என்று நித்ய விபூதியிலுள்ளார் உவந்தனர். ஆழ்வாரின பாட்டின்பம் அவ்வுலகத் தாரைக் கவர்ந்தது; அவரது அருள் இவ்வுலகத்தார்க்கு வாய்த்தது. ஆழ்வாரது அருள் இவ்வுலகினும் மிக்கது; கடல் மண்ணெல்லாம் விலையோவென மிளிரும்படியல்லவா அவரது கண்ணுடைமை இருப்பது!

'வேதத்தின் பொருள் சர்வேஸ்வரன்; வேதத்தின் உட்பொருள் ததீயர்களான அடியார். எனவே அடியார் பெருமை என் நெஞ்சுள் நிற்குமாறு பாடி அருள் செய்தார் ஆழ்வார். அவ்வுபகாரத்தை உட்கொண்டு, ஆழ்வாரைச் சரணடைந்ததே கைகண்ட பயன்' என்கிறுர் ஸ்ரீ மதுரகவி. ஆசார்யன் செய்யும் உபகாரமாவது சர்வேஸ்வரனைக் காட்டித்தருவ தாகும். அதற்குக் கைம்மாறு செய்ய மற்றொரு 'மிதுனஶேஷி' இல்லையாத லால் ஆசார்யனுக்கு நாம் செய்யும் கைம்மாறு ஒன்றுமில்லை என்கிறுர். பகவானைச் சரணடைகிறவர் பேற றுக்கு ஆறியிருக்க வேணடும் ஆனுல ஆழ்வாரைச் சரணபுகுந்தார் கடைத் தேற்றம பெறுதல் உடனேயல்லவா என்கிறுர்.

பலன் கருதாமல் சொல்லுகிற அறிவுரை எல்லாராலும் விரும்பப்படுவ தாகும், இத்தகைய அறிவுரை அதற்குப் பாத்திரமல்லாதார்க்கும், அவர்கள் இழவு பொறுக்கமாட்டாமல் சொல்லப்படுவதுணடு. இதுபோன்ற அறிவுரையை சீதாப் பிராட்டி, இராவணனுககும் கூறியதுண்டு. இரு பக்கமும் தீப்பற்றி, அதன் நடுவிலே அகப்பட்டவனைக் காப்பாற்ற எண்ணிப் புகுவார் போலே யாய்த்து ஆழ்வார் உபதேசம். அநர்த்தப்படு வோரைத் திருத்துவதில் ஆழ்வார்க்குள்ள அன்பே காரணமாகும். இத்தகைய ஆழ்வாரின் அன்பையே தாம் அடைய முயல்வதாகக் கூறுகிறுர் ஸ்ரீ மதுரகவி.

இவ்வாறு தன்னை அடைந்தார்க்கு அனபுறுயும, திருக்குருகூரில் பூரணராயுமுள்ள ஸ்வாமி நம்மாழவாருக்கு அனபறுக விளங்கிய ஸ்ரீ மதுரகவி ஆழ்வாரின் சொல்லை நம்புவார் பதி வைகுந்தமாகும என்று பலன் சொல் லித் தலைக்கட்டுகிறுர், ஸ்ரீ மதுரகவி. நம்புவார் பதி வைகுந்தம் எனபதற்கு ஸ்ரீ மதுரகவி சொலலை நம்புவார்க்கு மறுமைப் பயன் வைகுந்தத்திருப்பு என்றும, இவர் சொல்லும் அறிவுரை யில் நம்பிககைவைப்பார் வாழும் இடமே வைகுந்தத்திற்கு நிகரான பெருமையுடையது என்றும் இருவித மாக வுரைப்பர்.

இவ்வளவு பெருமைக்குரிய ஸ்ரீ மதுர கவி ஆழ்வாரின் திருநட்சததிரம் சித்திரை மாதத்துச் சிததிரை நாள ஆகையால் அவா காட்டும் நெறியில் ஞாலமுய்ய அவரடி பணிகிறேன்.

வேறொன்றும நானறியேன வேதம்
தமிழ்செய்த,
மாறன் சடகோபன் வண்குருகூா—
ஏறு, எங்கள்
வாழ்வாமென் றேத்தும மதுரகவி
யார், எம்மை
ஆள்வார் அவரே யரண்.

ஸ்ரீ முக்தேஸ்வரசுவாமி கோயில்-புவனேஸ்வர்:
திரு. D. K. K. சௌத்ரி-திருப்பதி.



# இயற்கை காட்டும் இறைத் தன்மை

புலவர். ந. பானுகுமார், தெள்ளாறு

இறைவன் என்று எவனும் கிடையாது, இவ்வுலகம் இயற்கையாகத் தோன்றி இயற்கையாகவே நடைபெற்றுக் கொணடிருக்கிறது. அப்படியிருக்கையில் இறைவனை இயற்கையோடு தொடர்பு படுத்தி ஏன் கதை அளக்கிறீர்கள்..... ? இதுபோன்ற அறியாமைமிக்க கேள்வியை இப்பவும் கேட்டுக் கொண்டுதான் இருக்கிறார்கள. இதற்கான பதிலை அறிவு பூர்வமாக, ஆதார பூர்வமாக விளக்க வேண்டும் என்பதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

**உலகம்;** இயற்கையாகவே உலகம் தனது அச்சில் மணிக்கு 1000 மைல் வீதம் தன்னைத்தானே சுற்றிக் கொள்கிறது. இதுவே 1000க்கு பதிலாக 500 மைலாகவோ, அல்லது 2000 மைலாகவோ சுற்ற ஆரம்பித்துவிட்டால் இரவும் பகலும் இரணடு மடஙகு நீளும், அல்லது இரணடு மடங்காகக் குறையும். அப்படியிருக்க இதை ஒவ்வொரு நாளும் சரியான முறையில் சுறற விடுபவன் யார்?

**சூரியன்:** சூரியனின் மேற்பரப்பில் நிலவும் உஷ்ணம் 12,000 டிகிரி பாரன்ஹீட் ஆகும். இதி லிருந்து உலகம 9 கோடி மைல் தள்ளியிருப்பதால் நிரநதரமான அந்நெருப்புக் கோளம் நமக்கு இதமாக இருநது வருகிறது. இந்தச் சூர்ய வெப்பம் பாதி மடங்காக அல்லது இரண்டு மடங்காக மாறி விடுமானால் நாம உறைநது போக வேண்டும். அல்லது வறுபட்டுப் பொசுங்க வேணடும்.

இதை ஒரே சீரான முறையில் வைத்திருப்பவன் யார்? யோசிக்க வேண்டாமா?

**சந்திரன:** பூமியிலிருநது சந்திரன் சுமார் 2 லட்சம் மைல் தூரம் தள்ளி இல்லாமல் அருகிலேயே வந்துவிட்டால் கடல் கொந்தளிப்பு அதிகமாகி ஆபத்துக்கள் வந்திருக்கும்.

இந்த ஆபத்துக்களிலிருந்து தடுப்பவன் யார்?

**கடல்:** இன்றிருப்பதைவிட இன்னும் சில அடிகள் கடலாழம் அதிகமானால், கரியமில வாயுவும், பிராண வாயுவும் உறிஞ்சப்பட்டு உயிரினமே வாழ முடியாதபடி ஆகியிருக்கும். அது நிகழாமல் இத்தனை கோடி ஜீவராசிகளையும் பிழைக்க வைத்துக் கொண்டிருப்பவன் யார்? அடையாளம் கண்டு கொள்ள வேண்டாமா?

**எரி நட்சத்திரங்கள:** பல லட்சம் எரி நட்சத்திரங்கள் வானவெளியில் அவ்வப்போது பொசுங்கு கினறன அதுபோது புவி ஈர்ப்புச் சுழல் சறறு லேசாகியிருந்தால், அவைகள் பூமியில் விழுந்த வேளையில் தீப்பிடித்து உலகமே கருகிச் செத்திருக்கும்.

இந்நிலை நிகழாமலிருக்க யாது காரணம்?

**மனிதன்:** மனிதன் எப்படி பிறக்கிறான்? கருவை உருவாக்கத்தான் அவனால் முடிகிறது, ஆனால் அதை வளர்ப்பது யார்? அவையவங்களை சரியாக அதற்கு கொடுப்பது யார்? சரியான காலத்தில் அதை பிறக்கச் செய்வது யார்?

இது போன்ற கேள்விகளை அந்த நாத்திக அன்பரிடம் கேட்போமானால் அவர் காட்டும் மௌனமே அதற்கு விடையாகும். காரணம் சொல்ல முடியாத அந்த மௌனத்தை, சக்தியைத்தான் நாங்கள் தெய்வம் என்கிறோம் என துணிவுடன் கூற நம் நெஞ்சில் தைரியம் பிறக்கிறது.

உருவாக்காமல் எந்தப் பொருளும் உருவம பெறுவதில்லை. இத்தனை வகையான செயல்களும் நடை பெற அறிவுமிக்க ஒரு சக்தி வேணடும். அது ஆணடவனின் சக்தியைத்தவிர வேறு எதுவாக இருக்க முடியும்.

அது மட்டுமல்ல உலகில் எதற்கும் ஒரு எதிர்மாறு உண்டு. ''மேலே'' என்றால் ''கீழே'', ''குள்ளம்'' என்றால ''உயரம்''. இது போலச் சொல்லிக் கொணடே போகலாம். அதே போல மனிதன் என்றால் எல்லா ஆற்றலும் அற்புதமும் கொண்டவன் எனறு சொல்லிவிட முடியாது. இவனுககு எதிர்மாறாக எல்லாவித ஆற்றலும், அன்பும், பணபும், பாசமும், எல்லாம் உணர்ந்த நிலையும் ஆகிய பண்புள்ள ஒருவன் இருக்கத் தானே வேண்டும். அவனைததான் இந்து மதம 'இறைவன்' என்கிறது. மழையை நம்பி விவசாயி விதை விதைக்கிறான். லாபத்தை நம்பி வியாபாரி தொழில செய்கிறான். அதுபோலத்தான் கடவுளை நம்பி பக்தனும் வாழ்வாங்கு வாழ்கிறான். நம்பினவன் நாராயணனனிலும், நடராஜனனிலும் இறைவனைக் காணுகின்றான்.



# அடியேன் அகத்திலமர்ந்த அணியரங்கன்

ஸ்ரீயஃபதியான ஸர்வேச்வரன், ஸ்ரீவைகுண்ட நிகேதனனுய் நித்ய முக்தானு பாவ்யனுய் நிரதி சயாநந்த யுக்தனுயிருக்கச் செய்தேயும் பரத்வ ஸ்தானமான பரம பதத்திலும் சுவே தத்வீபவாசிகளால் க்ஷீ ரா ப் தி நாத னு டை ய ஸௌந்தர்யாதிகளிலே தோற்று ஈ டு ப ட் டு ச் செல்லும் ''ஜி த ந் தே '' ஸ்தோத்திரத்திலே அகமகிழ்ந்து நிற்கும் க்ஷீராப்தியிலும் விசேஷ அபிலாஷையின்றி இப்பூமண்டலத்திலுள்ள ஸம்ஸாரிகள் பு த் ர மித்ர களத்ராதிகளுடனும் உழன்று சுழன்று கணக்கற்ற துக்கங்களுக்குப் பிறப்பிடமாம் மி க க் கொடியதான இந்த ஸம்ஸாரமாகிற ஸமுத்திரத்தைத் தாண்ட முடியாமல் தவிக்கிற குடும்பியின்பால் அனுதபித்து அவர்களுக்கென்றே ஒரு இ ரு ப் பை திருவுள்ளம் பற்றி இதில் எல்லா சேதநர்களும் இட்ட வழக்காய் தமருகந்த தெவ்வுருவம் அவ்வுருவத்துடனும் தமருகந்த தெப்பேர் அப்பேருடனும் தமருகந்து எவ்வண்ணம் சிந்தித்து இருப்பதையே பரம போக்யமாகக் கொண்டு இருக்கும் நிலேயே ''அர்ச்சாவதாரம்''. இந்த அர்ச்சா ரூபத்தை ஸ்வயம், வ்யக்தம், திவ்யம், ஸைத்தம், மானுஷம் என நான்கு விதமாகச் சொல்லப்படுகின்றன. ''ரங்கம்'' என்று பெயருள்ளதாய் ஸ்வயம் வ்யக்தமாயுள்ள இந்த ரங்க விமானமே முதன் முதலில் ஏற்பட்டது. இது தவிர ஸ்ரீமுஷ்ணம், வேங்கடாத்ரி, தோதாத்ரி, புஷ்கரம், ஸாளக்ராமம், பதரிகாச்ரமம், நைமிசம் என க்ஷேத்திரங்களில் ஸர்வேச்வரன் ஸ்வயம் வ்யக்தமாக ஆவிர்பவிக்கிருன். மேலும் ஸைத்த ஸ்தலங்களும் திவ்ய ஸ்தலங்களும் மனுஷ்யர்களால் நிர்மாணித்து ப்ரதிஷ்டை பண்ணின ஸ்தலங்களும் உள்ளன. ஸ் வ ய ம் வ்யக்தத்தைச்சுற்றி இரண்டு யோஜனை தூரமும், திவ்விய தேசத்தைச் சுற்றி ஒருயோஜனை தூரமும், ஸைத்யத்தைச் சுற்றி அரை யோஜனை தூரமும், மானுஷத்தைச் சுற்றி ஒரு க்ரோச தூரமும் உத்தமமான பு ண் ய பூமியாகும். ஸ் வ ய ம் வ்யக்தங்களில் ''ஸ்ரீரங்க க்ஷேத்திரம்'' மஹா ச்ரேஷ்டமானது. இந்த க்ஷேத்திரத்திலுள்ள பக்ஷிகள், ம்ருகங்கள் முதலானவைகளுக்கும் முக்தி உண்டு என்பது ப்ரமாணம்.

ஸ்ரீ உ. வே. கோ. க. வா. கோவிந்தராஜ பாவஞசார்யா ஸ்வாமி – ஸ்ரீரங்கம்.



''ஸ்ரீரங்கம்'', கா வே ரி என்கிற மஹா நதியால் சூழப்பெற்றது. இதன் மத்தியில் இருப்பது, பகவானுடைய 'சேஷ சயனம்'. ஸம்ஸார தாபத்தால் தவிக்கும் குடும்பிக்குப் புகலிடமாம். இது '' ஸ்ரீ '' எனப் பெயர் பெற்ற 'லக்ஷ்மீ' விநோதமாய் இருக்க வல்ல ரங்கஸ்தலமாகையாலே ''ஸ்ரீரங்கம்'' எனப்படும். ஒப்புயர்வற்ற ஸர்வேச்வரன் க்ஷீர ஸமுத்திரத்தில் சயனித்திருந்து, ஸகலருக்கும் ஹிதம் செய்யும் பொருட்டு, முன் ஒரு காலம் தவம் கிடத்த பிரம்மாவுக்கு ப்ரத்யக்ஷமானுர். பிரம்மா அஷ்டாக்ஷர மந்திரத்தைக் கொண்டு ஆ யி ர ம் வருஷம் தவம் செய்ததும், க்ஷீராப்தியிலிருந்து '' ஸ்ரீரங்க விமானம் '' ஆவிர்பவித்தது. அப்பொழுது சிவன், நாரதர், சுனந்தர், நந்தர், ஸனந்தர் முதலிய ரிஷிகளும், ஸத்யவாதிகளான இதரர்களும், கந்தர்வர், யக்ஷர், ஸித்தர், சாரணர் முதலானேர் யாவரும் காணப்பட்டனர். தி வ் வி ய விமானத்தை வேதமூர்த்தியான கருடன் வஹித்துக் கொண்டிருந்தார். ஆதி சேஷன் மு த் து ம ய ம ா ன வெண் கொற்றக் குடை பிடித்தார். விஷ்வக் ஸேநர் கை யு ம் செங்கோலுமாய் பின்புறமிருந்து உபசரித்தார். சந்திர சூரியர்கள் இரு புறத்திலும் சாமரம் வீசினர். நாரதர், தும்புருவர், கந்தர்வர், கின்னரர், அமரர் முதலானேர் பகவானைப்பாடி தோத்திரம் செய்து வ ந் த ன ம் செய்தார்கள். சிவன், இந்திரன், தேவர், ஸாத்யர், ஸித்தர் முதலானேர் '' ஜிதந்தே '' தோத்திரம் செய்தார்கள். தேவ துந்துபிகள் முழங்கின; அப்ஸரஸ ஸ் தி ரீ க ள் நடித்தனர். புஷ்கலன், ஆவர்தகம் என்கிற மேகங்கள் புஷ்பவர்ஷம் வர்ஷித்தன. ''ரங்க விமானம்'' வந்ததென்று எக்காளம் ஊதியது.

ஸ்வயம் வ்யக்தமாய், ஐசுவரியம் நிறைந்ததாய், தே ஜோ ம ய ம ா ய், ப்ரணவாக்ருதியாயுள்ள ரங்க விமானத்தையும், அதிலுள்ள பகவானையும் பார்த்தவாறே பிரம்மா தன் நான்கு முகங்களாலும் வேதத்துக்கொப்பான வாக்யங்களால் 'நமோ நமஃ' என்று சொல்லிக் கொண்டு '' ஜிதந்தே '' தோத்திரம் செ ய் து கை கூப்பி நின்றுர். ரங்கனுதன் எழுந்தருளியிருக்கும் விமானத்தில், தேவாஸுரர்களுடன் கூடியதாய், சராசரமாயுள்ள இந்த ஜகம் முழுவதும் தெரிந்தது.

விமானத்துக்கு மேலே சுவர்கமும், கீழே பூமியும், மத்தியில் ஆகாசமும், உள்ளே ஆதிசேஷனும், வாசல் புறத்தில் ஜெய விஜயர்களும், பக்கங்களில் விக்னபதியும் துர்க்கையும், சிகரத்தில் ஜகத்காரணமாய் ஓங்கார ரூபியாயுள்ள ஸரஸ்வதியும், விமான சிகரங்களில் வேதங்களும், நாஸிகா ஸ்தானத்தில் ஸகல ரஹஸ்யங்களும், பாதங்களில் யக்ஞங்களும், பலகங்களில் இஷ்டிகளும், ஹ்ருதயஸ்தானத்தில் சயனமும், வயிற்றில் ஹவிஸ்ஸும், உள்புறத்தில் தேவர்கள், அஷ்டவசுக்கள், ஏகாதச ருத்திரர்கள், துவாதசாதித்யர்கள், அச்வினி பூதர்களான நக்ஷத்திரர்கள், நக்ஷத்திர ரூபியான புண்யவான்கள், மரீசி முதலான சப்த ரிஷிகள், அஷ்டதிக்பாலர்கள், ஸோமன், பர்ஜந்யன் முதலானோரும் இருந்தனர். பிரும்மா ஒவ்வொரு திக்கிலும் நமஸ்காரம் செய்து கொண்டு விமானத்தை நான்கு பிரதக்ஷிணம் செய்து உள்ளே போய் இரு கை கூப்பி நின்று, ஆதியாய் அனந்தனாய், ஜகத்பூஜ்யனாய், நீல நிறத்தனாய், தெளிந்த முகத்தனாய், க்ருபாமயனாய், ஸர்வாபரண பூஷிதனாய், ஒரு கையை தலையிலணைத்து, மறுகை நீட்டி, ஒரு கால் நீட்டி, மறு கால் ஒடுக்கி, உலகின் கார்யமனைத்தையும் கட்டளைக் கீழாக்கி, பாம்பணையில் பள்ளி கொண்ட பரமனைக் கண்டு, வேதார்த்தம பொதிந்த வாக்கியங்களால் தோத்திரம் செய்தார்.

பகவான், ''உம்முடைய தவத்தாலும், துதியாலும் என் ரூபத்தை நீர் இன்று தரிசிக்கிறீர். உம்முடைய கருத்தை அறிந்து, என் விக்ரஹத்தையும் விமானத்தையும் உமக்குக் காட்டினேன். நீர் என்னை இந்த விமானத்திலேயே பூஜிப்பீராக. என்னை தினந்தோறும் பாஞ்சராத்ரகாலிகாராதனம் செய்பவனுக்கு நான் மோக்ஷத்தை கொடுக்க ஸித்தமாயிருக்கிறேன். சகல ஆவரணங்களோடு கூடிய இந்த அண்டகோசத்துக்குப் புறம்பாயுள்ள நான், உன்னுடைய தவத்தையும்



துதியையும் மெச்சி உமக்குத் தரிசனம் கொடுப்பதற்காகவே அர்ச்சாரூபியாய் அவதரித்தேன். என்னுடைய இந்த முதல் அர்ச்சாவதாரத்தை நீர் முக்தி பெறுவதற்காகப் பூஜியும். க்ஷீராப்தி, சூர்ய மண்டலம், தேவலோகம் ஆகிய மூன்று ஸ்தானங்களிலும் கூட, ராஜஸர்களும் தாமஸர்களும் என்னைக் காண முடியாதாகையால், நான் கல்பம்தோறும் பக்தர்களை அனுக்ரஹிப்பதற்காகவே ஆயிரக்கணக்கான அவதாரங்களை எடுக்கிறேன். நான் தாருலோகம், சிலை இவற்றால் செய்யப்பட்ட மனுஷ்யாக்ருதியான அர்ச்சா ரூபியான எல்லா த்வீபங்களிலும், தேசங்களிலும், புண்ய தீர்த்தங்களிலும், ஆலயங்களிலும், ஒவ்வொரு கிராமத்திலும், ஒவ்வொரு க்ருஹத்திலும் அவதரிக்கப் போகிறேன். எனக்கு அர்ச்சனம், தோத்திரம், கீர்த்தனம், வந்தனம் முதலியவற்றைச் செய்பவர்கள் பரமபதம் பெறுவார்கள்'' என்று சொன்னார். பிரும்மா எப்பொழுதும் பகவத்ஸ்வரூபத்தை ஸேவிக்க விரும்பியபடி ஸர்வேச்வரன் ஜகத்தை ச்ருஷ்டிக்கையில், ஆதிசேஷன் மீது சயனித்து, ''பிரும்மதேவரே! உமக்காகவேதான் இவ்வுருவம் எடுத்தேன். நான் இப்படி சயனித்திருக்கும் 'ஸ்தானத்தை' 'ரங்கம்' என்றே உலகத்தில் யாவரும் சொல்லப் போகிறார்கள். இந்த சயனம் எப்பொழுதும் அழியாமல் இருக்கும். இதைப் பெற்றுக் கொண்டு என்னைப் பூஜித்து வாரும்'' என்று சொல்லி ரங்க விமானத்தை பிரும்மாவுக்குக் கொடுத்தார். பிரமன் அதைப் பெற்று மகிழ்ச்சியுடன் பாஞ்சகாலிகாராதனம் செய்து வந்து பின்னர் மனுவுக்குக் கொடுத்தார். மனுவும் பூஜித்து வந்து அதைத் தன் பிள்ளை இக்ஷ்வாகுவுக்குக் கொடுத்தது முதல் இந்த ''ரங்க விமானம்'', ஸ்ரீ ராமன் வரைக்குமுள்ள இக்ஷ்வாகு குலத்தரசர்களால், இக்ஷ்வாகு குலதனமாகக் கருதப்பட்டு வந்தது.

சக்ரவர்த்தி திருமகன், தன் மனைவியான சீதையை அபஹரித்த இலங்கேச்வரனான ராக்ஷஸ ராவணனை வதம்செய்வதற்குத் தனக்கு அனுகூலனாக இருந்த விபீஷணனுக்குத் தன் பட்டாபிஷேக காலத்தில் இந்த விமானத்தைப் பரிசாகக் கொடுத்து ''இந்த பூமண்டலமும், சந்திர சூரியர்களுமுள்ள வரையில் நான் கொடுத்த லங்கைச்வர்யம் அழியாமல் இருக்கும். நீ எனக்குச் செய்த மகோபகாரத்துக்காக, பிரமன் பெருந்தவம் புரிந்து பெற்றுப் பூஜித்து விரும்பியவைகளைப் பெற்ற இந்த

ரங்க;விமானத்தை உனக்குக் கொடுக்கிறேன். பிரமனிடமிருநது மனுவும், மனுவிடமிருந்து இக்ஷ்வாகுவும், தபோ மஹிமையால் இவ்விமானத்தை அடைந்து, என் முன்னோர்கள் யாவராலும் இது நனகு பூஜிக்கப்பட்டு வந்தது. இக்ஷ்வாகு வம்சத்திறகே குலதனமாக வந்துள்ள இந்த 'ரங்க விமானத்தை'' எனக்கு உன்னிடமுள்ள ப்ரீதியாலும் என் உயிரைக் கொடுப்பதுபோலக் கொடுக்கிறேன். இதைப் பெற்றுக் கொணடு லங்கைக்கு போய் பூஜித்து விரும்பியவையனைத்தையும் பெறுவாயாக'' என்றான். விபீஷணன் விநயமுடன் பெற்றுக் கொண்டு 'ரங்க விமானத்தை' சிரஸாக வஹித்துப் புறப்பட்டான்.

பார்த்தாலும், தொட்டாலும், பருகினாலும், நினைத்தாலும் பாபமனைத்தையும் போக்குவிக்கும் இக்காவேரியைக் கிட்டியதும், பூஜா காலம் நேர்ந்ததால் இரு காவிரியின் நடுவிலுள்ள புஷ்கரணிக் கரையில் இந்த விமானத்தை வைத்து இங்குள்ள ரிஷிகளைப் பார்த்து 'நான் பூஜைக்காக புஷ்பம் பறிக்கப் போகிறேன். நீங்கள் வந்து பகவானை தரிசியுங்கோள்' என்று சொல்லிவிட்டு விபீஷணன் சென்றான். ரிஷிகளும், மஹான்களும், பாகவதோத்தமர்களும் வந்து பெருமானை ஸேவித்தார்கள். விபீஷணன் அனுஷ்டானங்களை முடித்து புஷ்பங்களை எடுத்துக் கொணடு, ரிஷிகள் ஸஹிதம் வெகு நேரம் ரங்கநாதனை ஆராதித்து, பின்னர் விமானத்தைத் தூக்க முயன்றான். ராக்ஷஸ ராஜனும், லங்காதிபதியுமான விபீஷணன் வெகுவாய் முயன்றும், விமானத்தை அசைக்க முடியாமல் களைத்து கீழே விழுந்து புலம்பினான். விபீஷணுழ்வான் முன் ஸ்ரீரங்கநாதன் ப்ரத்யக்ஷமாகி, ''விபீஷணு! இந்த தேசம் மிகவும் இனிதாயுள்ளது. நதியின் தீர்த்தம் மிகவும் ரமணீயமாயுள்ளது. நான் லோக க்ஷேமத்திற்காக இங்கேயே படுத்திருக்கிறேன். நீ லங்கை சென்று அங்கிருந்தே என்னை ஆராதித்து பந்துமித்ராகளோடு சுகித்திருப்பாய். உனக்கு க்ஷேமமுண்டாகட்டும்'' என்று சொல்லி சமாதானப்படுத்தி அவனை லங்கைக்கு அனுப்பிவிட்டார். குளிர்ந்த ஜலமும், இனிய சோலைகளுமுள்ள ஸ்ரீரங்கத்தில் இன்றும் சயனித்திருக்கிறார்.

[தக்ஷன் சாபத்தால் பீடிக்கப்பட்ட க்ஷய ரோகம் நீங்குவதற்கு சந்திரன் இந்த புஷ்கரணிக் கரையில் இருந்து தினமும் ஸ்நாநம் செய்து அதில் விஹஸிக்கும் தாமரை மலர்களைக் கொண்டு ரங்கனுதனை பதினைந்து வருடம் ஆராதித்து வந்தான். சந்திரன் செய்த தோத்திரத்தால் மகிழ்ந்து பகவான் ப்ரத்யக்ஷமாகி, சந்திரனின் சாபத்தை விமோசனம் செய்து இந்த புஷ்கரணிக்கு ''சந்திர புஷ்கரணி'' எனப் பெயரையும் கொடுத்தார்.

புத்திரனைப் பெறுவதற்காக தசரத சக்ரவர்த்தி அசுவமேதம் புத்ரகாமேஷ்டி யாகங்கள் செய்யும் பொருட்டு, சோள தேசத்தை ஆண்டு வந்த தர்மவர்மா உள்பட எல்லா அரசர்களையும் அழைத்தார். எல்லோரும் அயோத்தியில் இருந்த ரங்க விமானத்தை தரிசித்தார்கள். யாகத்தின் சிறப்பையும் நகரத்தின் ஐச்வர்யத்தையும் கண்டு தர்மவர்மா, ''இக்ஷ்வாகு தவம் கிடந்துப் பெற்ற இந்த ரங்கவிமானத்தின் மஹிமையினுலன்றோ, இந்தக்கோசல நாடு இத்தனை செழிப்பாயுள்ளது! நானும் தவம் செய்து, போக மோக்ஷங்களைக் கொடுக்கவல்ல இந்த விமானத்தைப் பெறுகிறேன்'', என்று சபதம்செய்து, யாகம் முடிந்தவுடன் தன் தேசம் போய் சந்திர புஷ்கரணி தீரத்தில் தர்மவர்மா கடும் தவம் செய்ய ஆரம்பித்தார். பகவானுடைய ஸ்வயம் வ்யக்த ஸ்தானமாயுள்ள, ஸ்ரீமத் ரங்கத்தை, தன்னுடைய புண்ய கர்மாக்களாலும், கடுந்தவத்தாலும், பிரமன் போலவும், இக்ஷ்வாகு போலவும் கடுந்தவம் மேற்கொணடான். ராஜாவின் இஷ்டம் நிறைவேறுமென்று ரிஷிகள் ஆசிர்வதித்தார்கள்.]

விபீஷணனுல் சந்திர புஷ்கரணிக் கரையில் எழுந்தருளப்பண்ணின 'ஸ்ரீரங்க விமானத்தை'' தர்மவர்மா உள்பட எல்லோரும் ஸேவித்தார்கள். இக்ஷ்வாகு நடத்தின மஹோத்ஸவம் மறுநாள் ஆரம்பமாகையால், தர்மவர்மாவின் யோசனைக் கிணங்கி, விபீஷணன், இங்கேயே உத்ஸவத்தை நடத்தினான். ஒன்பது நாள் உத்ஸவமும் பூர்த்தியாகி பூர்ணமையன்று அவபிருதம் நடந்தது. ராஜாவிடமும், மற்ற பிராம்மணுேத்தமர்களிடமும் விடைபெற்று ரங்கவிமானத்தை எடுக்கும்போது எடுக்கமுடியாமல் போகவே விபீஷணன் கதறியதைக் கண்டு மறுபடியும் ஸ்ரீ ரங்கநாதன், ''ஸகல பாவத்தையும் போக்கவல்ல உபய காவேரியின் மத்தியிலுள்ள சந்திர புஷ்கரணிக் கரையிலேயே தர்மவர்மனும் ஸதா காலமும் என்பேரில் பக்தியுள்ளவனுக இருக்கிறபடியாலும், புண்யவான்களான ரிஷிகளும், பிராமணுேத்தமர்கள் இங்கு வசித்து நித்ய மங்களாசாஸனம் செய்கிறபடியாலும், நான் இங்கேயே இருந்து கொண்டு, விபீஷணு! நான் உன்னைப் பார்த்தபடியே சயனித்துக் கொள்கிறேன். நான் கொடுத்த லங்கா ராஜ்யத்தை நிஷ்கண்டமாக அனுபவி. இந்தக் கல்பத்தின் முடிவில் நீ என்னேடு பிரும்ம லோகத்துக்கு வந்து மீண்டும் என்னேடு கூடவே இங்கு வருவாய்'' என்று திருவாய் மலர்ந்தருளினார்.

தர்மவர்மா, பிராஹ்மணர்களைக் கொண்டு பகவானுக்கு வேண்டிய ஸகல கார்யங்களையும் செய்து வைத்தான். அது முதல் ''ஸ்ரீரங்க விமானம்'' காவேரி தீரத்தில் கல்பாந்த சாயியாய், மனுஷ்யர்களுக்குத் தரிசனம் கொடுத்துக் கொண்டு இருக்கிறது.

**(அடுத்த இதழில் முடிவுறும்)**

# திருமலையிலும் திருப்பதியிலும் உணவு வசதிகள்

நாட்டின் பல்வேறு பகுதிகளிலிருந்து யாத்திரை மேற்கொள்ளும் யாத்திரிகர்களின் அடிப்படை பிரச்னைகள், அவர்கள் போகும் இடங்களில் அமையும் தங்குவதற்கான இருப்பிடமும், உண்ணும் உணவும்தான். இதை மனதிற்கொண்டுதான் தி.தி. தேவஸ்தானம் திருமலையிலும் திருப்பதியிலும் யாத்திரிகர்கள் தங்குவதறகாக இலவச சத்திரங்கள் பலவற்றையும், வசதியான காட்டேஜுகள் பலவற்றையும் கட்டியுள்ளது. இவை எவ்வகையில் உதவியாக அமைந்துள்ளன என்பது திருமலைக்கு வருகை புரியும் ஒவ்வொரு யாத்திரிகருக்கும் நன்கு தெரியும். அடுத்து எழுவது உணவுப் பிரச்னை. திருமலையில் தனியார் உணவு விடுதிகள் பல இருந்தாலும், சுகாதாரமான முறையில் செய்யப்பட்டு, நியாயமான விலையில் வழங்கப்படும் உணவு வகைகள் தேவஸ்தானத்தாரின் உணவு விடுதிகளிலும், மற்றும் தேவஸ்தானத்தாரால் குத்தகைக்கு விடப்பட்டுள்ள தனியார் நடத்தும் சில சிறந்த உணவு விடுதிகளிலும் மட்டுமே கிடைக்கும். இவற்றைப் பற்றிய சில அடிப்படை விவரங்கள், யாத்திரிகர்களின் நன்மையின் பொருட்டு கீழே வழங்கப்பட்டுள்ளன.

### அன்னபூர்ணு ஹோட்டல்

(சங்கு மிட்டா காட்டேஜ் அருகில்)

சிற்றுண்டி நேரம்: 5 A.M. to 10 P.M.
சாப்பாடு நேரம் : 9 A.M. to 3 P.M.
6 P.M. to 10 P.M.

அளவு சாப்பாடு ரூ. 1-75
முழுசாப்பாடு ரூ. 3-00

(சனிக்கிழமைகளில் பாயசம் வழங்கப்படும்)

இவற்றைத்தவிர கார வகைகளும், குளிர்பானங்களும், சூடான பானங்களும் இங்குக் கிடைக்கப் பெறலாம்.

### உட்லேண்ட்ஸ் ஹோட்டல்

(தி. தி. தேவஸ்தான விருந்தினர் விடுதிக்கு அருகில்)

சிற்றுண்டி நேரம் : 6 A.M. to 10-00 P.M.
சாப்பாடு நேரம் : 11 A.M. to 2-30 P.M.
6 P.M. to 10-00 P.M.

தமிழ்நாடு சாப்பாடு ரூ. 4-00
வடஇந்தியச் சாப்பாடு ரூ. 6-00
அளவு சாப்பாடு ரூ. 1-75

இவற்றைத் தவிர இனிப்பு வகைகளும், குளிர் பானங்களும் நியாயமான விலையில் இங்குக் கிடைக்கும்.

### காஃபி போர்டு

(கல்யாண கட்டாவிற்கு அருகில்)

சிற்றுண்டி நேரம் : 5 A.M. to 10 P.M.
மினி காஃபி (4 அவுன்ஸ்) 40 காசு
ஒரு கோப்பை காஃபி (6 அவுன்ஸ்) 60 காசு

இவற்றைத் தவிர சிற்றுண்டி மற்றும் குளிர் பானங்கள் போன்ற வசதிகளும் உள்ளன.

இந்நிறுவனத்தாரின் மற்றொரு கிளை பி. பி. ஷெட்டிற்கு (க்யூ ஷெட்டிற்கு) அருகில் உள்ளது.

வேலை நேரம் : 5 A.M. to 10 P.M.

தயிர்சாதம் (ஒரு பாக்கெட்) ரூ. 0-60
எலுமிச்சை சாதம் ,, ரூ. 0-60

குளிர்பானங்களும் கிடைக்கும்.

### டீ போர்டு

(ஆழ்வார் ஏரிக்கு அருகில்)

வேலை நேரம் : 6 A.M. to 11 A.M.
2 P.M. to 6 P.M.

டீ 25 காசு.
ஆம்ப்ரோ க்ளுகோ பிஸ்கட்டுகள்
(ஒரு பாக்கெட்) 75 காசு.

### தி. தி. தேவஸ்தான விருந்தினர் விடுதி

சிற்றுண்டி நேரம் : 6 A.M. to 9 A.M.
3 P.M. to 6 P.M.
சாப்பாடு நேரம் : 11 A.M. to 2 P.M.
7 P.M. to 9 P.M.

முழு சாப்பாடு ரூ. 3-00

இவைத்தவிர கார வகைகளும், இனிப்பு வகைகளும் குறைந்த விலையில் கிடைக்கும்.

(சாப்பாட்டுக்கும், சிற்றுண்டிக்கும் 3 மணி நேரத்திற்கு முன்பாகவே தங்கள் தேவைக்கு தகவல் தருதல் அவசியம்)

### திருப்பதியில் தி. தி. தேவஸ்தான உணவு விடுதி

(இரண்டாவது புதிய சத்திரததிற்கு அருகில்)

சிற்றுண்டி நேரம் : 5 A.M. to 9-30 A.M.
2-30 P.M. to 6 P.M.
சாப்பாடு நேரம் : 10-30 A.M. to 2 P.M.
6-30 P.M. to 9 P.M.

அளவு சாப்பாடு ரூ. 1-50
தயிர் (ஒரு கப்) ரூ. 0-40

இதைத் தவிர சிற்றுண்டி வகைகள், ஆம்ப்ரோ க்ளுகோ பிஸ்கட்டுகள், குளிர்பானங்கள் முதலிய உணவு வசதிகளும் உண்டு.

தி. தி. தேவஸ்தானத்தின் முதல் சத்திரத்தில் உள்ள மற்றொரு தேவஸ்தான உணவு விடுதியிலும் சாப்பாட்டைத் தவிர மற்றைய சிற்றுண்டி வகைகள் குளிர் பானங்கள் போன்ற வசதிகள் காலை 5 மணி முதல் இரவு 9 மணி வரை யாத்திரிகர்களுக்குக் கிடைக்கும்.

# வியாழன்

'' தேவ மந்திரி விசாலாக்ஷ: சதா
லோகஹிதே ரத:
அநேக சிஷ்ய சம்பூர்ண பிடபம்
ஹரதுமே குரு ''

சூரியனுக்கு வடக்கே விளங்கும் பொன் கிரகமாகும் வியாழன். இவனுக்கு பல பெயர்கள் வழங்கப்படுகின்றன. அறிவிற்சிறந்தவனைக் கருதப் படுவதால் பிரகஸ்பதி என்றும், இந்திரனுக்கு குருவாக விளங்கியமையால் குரு என்றும், தேவர்களுக்கு மந்திரியாக திகழ்ந்ததால் மந்திரி என்றும் அழைக்கப்படுகின்றான். பொன் நிறத்தோன் ஆகவே பொன் எனவும், 'பீதாம்பரா லங்க்ருதாய'-பீதாம்பரம் தரித்து பீதகன் எனவும் பெயர் பெற்றான்.

இவனது தோற்றம்பற்றி அறிய 'ப்ரஹ்ம புத்ராய'—பிரமனின் வம்சமானவன் அதாவது 'ஆங்கிர:குலஸம்பவாய'—ஆங்கீர முனிவரின் புதல்வன் 'ப்ரஹ்மணுய' – பிரமன் என்றும் அழைக்கப்படுபவன் என்றெல்லாம் நாமாவளி கூறுகிறது. மற்றும் இவன் சிவனே துதித்துத் தவம் நோற்று சீவன் என்ற பெயரையும், 'குரு' என இந்திராதி தேவர்களுக்கு துதித்து போற்றப் பெறும் மந்திரியாக விளங்கும் ஆசியையும் பெற்றான் என்பதனே 'ஜீவாய'-'குரவே' 'தேவ பூஜிதாய' என்ற நாமாவளி காட்டுகிறது அந்தணன் எனவும் பெயர் உண்டு.

சோதிடர்களால் குரு என்றே பெரும்பாலும் அழைக்கப்படும் இவன் அறிவிற் சிறந்தவன் ஆதலால் ஞானத்திற்கு அதிபதி. உடலில் இவன் பங்கு தசை, மாமிசம். புத்திர, மூத்த சகோதர காரகன். சொந்த வீடுகள் தனுசும், மீனமும். கடகத்தில் உச்சன்.

' குரு பார்க்க கோடி புண்ணியம்'

நன்மையே செய்யும கிரகமான இவன் 5, 7, 9ம் பார்வைகள் கொண்டவன். குரு ஏழாம் இடத்தில் இருந்தாலோ அல்லது அவ்விடத்தை நோக்கினுலோ குரு பார்வை வந்துவிட்டது என்று பொருள். பாபக்கிரகங்களின் பாபத்தைபார்வையால் குறைப்பவன. சூரியன், மதி, ஆரல் மித்ரு. கணக்கனும், சுக்கிரனும் சத்ரு. சனி சமம். இவனுக்குரிய தசை 16 வருடங்கள்.

யோகம் தரும் சுபக்கிரகமான இவன், சந்திரனின்று 6ல் இருந்தால் சந்திராதி யோகமும், 5ம் வீட்டுக் குரிய ஆரலும் 6ம் வீட்டுக்குரிய இவனும் இடையே 4 கட்டங்கள் விட்டு இருந்தால் லட்சாதிபதி யாக்கும் ஷங்க யோகமும் கிடைக்கும்

' மதி தனக்கு கேந்திரத்தில் குருவே
நின்ருல்
வரவவற்குக் கெஜமுடன்கே
சரியாம் யோகம்'

என்கிறது ஆயுட்பாவகம். சந்திரனுக்கு 1, 4, 7, 10ல் குரு இருந்தால்

குமாரி. எஸ். உமாமகேஸ்வரி BSc.,
தஞ்சாவூர்.

கேசரி யோகமாம். சிலர் மதியை குரு பார்த்தால்தான் என்கின்றனர். லக்னத்தில் குரு சுக்கிரனுடன் இருந்தால் இரு அழகிகள் சாமரம் வீசும் 'சாமல யோகம்' கிட்டும்

இவனது குணதிசயங்களைப் பார்ப்போம். ஆண் கிரகமான இவன் முழுச் சுபன். ஆனல் ராகுவோடு கூடும் போது முழுப்பாபன். நெடிய வடிவம் கொண்டவன். பிரம்ம ஜாதியை சேர்ந்தவன். இவனது பாஷை சமஸ்கிருதம், தெலுங்கு. சௌமியக் கிரகமான இவன் உபயக்கிரகம். சாத்மீக குணம் கொண்டவன். இவனுக்குரிய பிணி-வாதம். திக்கு-வடக்கு. ஆசனம்-நீண்ட சவுக்க வடிவம். உலோகம்-பொன், ரத்னம்-புஷ்பராகம். தானியம்-கடலை, புஷ்பம்-முல்லை. சமித்து அரசு. ஊண்-குளிர்ச்சியாக புசிப்பன். சுவை - தித்திப்பு வாகனம் - யானை. கிரக தேவதை-பிரமன். சொந்த நிலப் பரப்பு-விந்தமலை முதல் கௌதமை நதி வரை.

இவனது வாரம் குரு வாரம். குரு வாரத்தின் சிறப்பை அறப்பளீசுர சதகம் கீழ்க்கண்டவாறு சொல்லுகிறது.

' நன்மைதரு குருவார மதுசேர்ந்து
வரிலாடை
நன்மையுடனே வந்தி டும்'

பிறந்த நாளோடு வருகின்ற குரு வாரத்தால் நன்மையும், ஆடையும் கிடைக்கும்.

' திருத்தகு;வியாழத்தின் மிக்கசம்
பத்திளுேடு
சிறுவரைப் பெற்றெடுப் பாள்'

பூப்புவாரம் வியாழனுகில் மிக்க சம்பத்தும் ஆண் மகப்பேறும் கிட்டும்.

' குருவார மதிலணிந் தால்,
மறைபடா தழகுண்டு மேன்மேலும்
நல்லாடை,
வரும்.........'

குரு வாரத்தில் புத்தாடை அணிந்தால் வரும் நன்மைகள் அழகும், மேன்மேலும் ஆடைகளுமாகும்.

ஆனல் இவ்வாரம் எண்ணெய் நீர் ஆடவும், விருந்துண்ணவும் கூடாத வாரம். அறிவு போகும், பகை உண்டாகும் என்றும் கூறுகிறது.

சூரியனுக்கு வடக்கே பிரதிஷ்டை செய்து பூசிக்கப்படும் வியாழன் பொன் நிறத்தோடு, பொன்நிற ஆடைகளோடு கிழக்கு நோக்கி விளங்குகிறன். கமண்டலம், அட்சமாலை, யோக தண்டம், அபயம் ஆகியவை கொண்டு 'ஸ்வர்ண காயாய' பொன் நிறமானவன், பொன்நிற ஆடை ஆபரணங்கள் கொண்டவன், பொன்

னிற மாலே, பொன்னுலானத் தேர், குடை ஆகியவை கொணடு 'தர்ம ரூபாய'-ஏழைகளு இரங்கும் தர்ம சொரூபனக காட்சியளிக்கின்றுன். துதிப்பவர்களுக்கு,('வாக்விசக்ஷுஷ', 'வாக்கருதே',) 'ஜயநதாய', 'ஜய வாக்கையும், ஜெயத்தையும் அளிப் பவன்.

தனக்கென சந்நிதி இன்றி சூரி யனுக்கு நேராக நின்ற நிலேயில் விளங்குகின்றுர் சூரியனுர் கோவிலில். நாம் ஆதிபெருமானிடம் வேண்டும் பிரார்த்தனேயை நிறைவேற்றி அருளு மாறு சிபாரிசு செய்யவே அவ்வாறு விளங்குகிருர் அத்தயாள மூர்த்தி, என் கின்றனர்.

'மறைமிகுகலே நூல்வலலோன் வான
வாக்காசான் மந்திரி
நறைசொரி தற்பகப் பொன்னுடடி
னுக்கதிபனுதி
நிறைதனஞ் சிவிகை மண்ணினீடு
போகத்தை நலகு,
மிறையவன் குருவியாழ மிருமலர்
பாதம் போற்றி போறறி'

எனப் போற்றி துதிக்கப்படும் வியாழ னுக்குரிய க்ஷேத்திரம திருச்செந்தூர; மூர்ததி ஸ்ரீ பாலஸுப்ரமண்யம்; மந்திரம் காயத்ரீ.

'வ்ருஷப த்வஜாய வித்மஹே
க்ருணி ஹஸத்தாய தீமஹி!
தந்நோ குரு! ப்ரசோதயாத்'

வியாழன் மாரகனுகில் இவனுக்குரிய சாந்தி, முல்லே அல்லது மஞ்சள நிற புஷ்பங்களால் அர்ச்சனே, நமஸ்காரம், அரசஞ்சமித்தினுல் ஓமம், கடலேத் தானம, தக்ஷிண மூர்த்திக்கு விசேஷ ஆராதனே, ஸ்ரீருத்திர ஜபம், தக்ஷிண மூர்ததி சகஸ்ர நாமபாராயணம. இவனது சந்நிதியில் இவனுக்குரிய கோலமிட்டு குருஸ்திதியையும ஸெந் தர்ய லஹரியையும் கூறி வழிபட்டால் **சகலஸம்பத்தும்,** வித்யையும் கிடைக்கும். 

# தி. தி. தேவஸ்தான தமிழ் சமய வெளியீடுகள்

| | ரூ. | பை |
|---|---|---|
| அஷ்டோத்ர சகஸ்ரநாம அர்ச்சனே ... | 1 | 00 |
| பாலசரிதம் (திரு. ஆர். ஸ்ரீநிவாச ராகவாச்சார்யா) ... | 0 | 75 |
| பால பாகவதம் (செவவைச சூடுவார்) முதல் பாகம் ... | 4 | 00 |
| ,, ,, இரண்டாம் பாகம் ... | 4 | 00 |
| தசரூபகம் (திரு. ஆர். ஸ்ரீநிவாச ராகவாச்சார்யா) ... | 3 | 50 |
| குருபரம்பரை (திரு. கே. பாலசுந்தர நாயக்கர்) ... | 3 | 00 |
| திருமலே வழிகாட்டி ... | 0 | 25 |
| ஸ்ரீ வேங்கடேஸ்வரர் மகாத்மியம் (தலபுராணம்) ... | 2 | 00 |
| ஸித்தாந்த த்ரய சங்க்ரஹம் (திரு. ஓ. வி. கபிஸ்தலம் தேசிகாச்சார்யா) ... | 2 | 50 |
| ஸ்ரீராமஜெயத் திருப்புகழ் பகுதி I, பகுதி II. (Each) (திரு. கே. பாலசுந்தர நாயக்கர்) ... | 3 | 00 |
| சர்வ தேவதா பூஜா விதானம் — தி. தி. தே — ... | 0 | 70 |
| ஸுப்ரபாதம (பொருளுடன்) ,, ... | 0 | 50 |
| ஸுப்ரபாதம ,, ... | 0 | 12 |
| செம்பொருள் (எஸ். கிருஷ்ணவேணி அம்மையார்) ... | 1 | 50 |
| ஸ்ரீநிவாச கல்யாணம் (வண்ணப்படங்களுடன) ... | 11 | 50 |
| திருககுறள் (பொருட்பால்) திரு.டி.பி. பழனியப்பபிள்ளே ... | 7 | 50 |
| ,, (காமத்துப்பால்) (தொகுத்தவர்) ... | 4 | 00 |
| திருவாய்மொழி (விளக்கவுரையுடன்) பாகம் 1 ... | 7 | 50 |
| (திரு. டி. பி. பழனியப்ப பிள்ளே) பாகம் 2 ... | 10 | 50 |
| யாப்பொளி (திரு. ஆர். ஸ்ரீநிவாச ராகவாச்சார்யா) ... | 3 | 50 |
| ஸ்ரீ கபிலேஸ்வர சுவாமி ஸுப்ரபாதம் (திரு. எம். வி. ராமநாத கனபாடிகள் ... | 0 | 20 |
| நித்யா நுஸந்தானம் — தி. தி. தே — ... | 3 | 75 |
| ஏழுமலே யாத்திரை (திரு. டி. கே. நாராயணன்) ... | 4 | 00 |
| சித்திர ஸுப்ரபாதம் (வணணப்படங்களுடன்) தி.தி.தே - ... | 8 | 00 |

## தி. தி. தேவஸ்தான வெளியீடுகளுக்கான விற்பனே சலுகை விவரங்கள்

தி. தி. தேவஸ்தான கல்வெட்டு அறிக்கைகள், தி. தி. தேவஸ்தான கலவெட்டுத் தொகுதி 1 மற்றும் தொகுதி 5 ஆக மூன்று நூல்களுக்கு, செட்டாக வாங்குவோர்க்கு, 12½% தள்ளுபடி:வழங்கப்படும்.

'ஸ்ரீ அன்னமாச்சார்யா சங்கீர்த்தனமுலு' மற்றும் 'தாள்ளபாக்கா பணிகள்' ஆகிய 6 தொகுதிகளே (தெலுங்கு) ஒருமித்துவாங்கினுல் 12½% தள்ளுபடி வழங்கப்படும்.

ரூ. 100 அல்லது அதற்கு மேறபட்டு விளங்கும விற்பனேககு 12½%, ரூ 500/- லிருந்து ரூ. 1000/- வரை விளங்கும் விற்பனேக்கு 20%, ரூ. 1000/-கு மேல் இருக்கும் விற்பனேக்கு 30% என்றவாறு கமிஷன் வழஙகப்படும். ரூ. 100/-க்கு மேற்பட்டு சரக்காணேகள் விளங்கினுல், அவற்றிற்கான தபால் செலவினே தி. தி. தேஸ்வதானம ஏற்கும்.

# அரக்கனுக்கும் அடைக்கலம்

'' ஊழி திரியுங் காலத்து
முலேயா நிலேய வுயிர் கிரியும்
வாழி வற்று மறி கடலு
மண்ணும் வடபால் வானரேயப்
பாழித் தெற்குள்ளன கிரியும்
நிலனுந தாழப பரந்நெழுந்த
ஏழு பததின் பெரு வெள்ள
மகர வெள்ளத் திறுத்தலால ''

—கம்பர்.

காகுத்தன் கடலே நோக்கிய வண்ணம் நின்று கொண்டிருந்தார். கடலின் அலேகள் மேலெழுநது விழுந்த பரந்த தோற்றமானது, தன்னே விட்டு நீங்கிய பரமன் தூங்குவதற்கு வந்து விட்டான் என்று எண்ணி பாயை விரித்தது போலிருந்தது. மேலும் தன் அலேகளாகிய கரங்களால், முத்து பவளம் முதலிய பொருள்களே ஏநதி வந்து இராகவனின் பாதக்கமலங்களில் காணிக்கை செலுத்துவதுபோல வும்காட்சியளித்தன. மேலும், மேலும் உயரக்கிளம்பி ஆரவாரம் செய்த தோற்றம், தன் மகள் சீதாதேவியின் துயர் நீங்கவும், தேவர்களின் குறை தீர்க்கவும், கையில் வில்லும் அம்புமாக இலங்கை செல்லவிருக்கும் தன் மருமகனன இராகவனேக் கணடதும் உவகை மிகுதியால, கைகளே உயரத் தூக்கி ஆரவாரம் செய்தது போலிருந்ததாம.

இவற்றையெல்லாம் நனகு கவனித்த வண்ணம் சிந்தனே செய்து கொணடிருந்த ஸ்ரீஇராகவன்ின் நிலே இப்படியிருக்க, இலங்கை மாநகரில கொலு மண்டபத்தில் எல்லா பிரமுகர்களேயும் கூட்டி, இராவணன் தன் துவக்கவுரையை ஆரம்பித்தான். ''என்பெருமை எல்லாம் ஓர் அற்பக் குரங்கினுல் அழிந்தது. குரங்குதான் நெருப்பையிட்டதுயென்ருல், என் முன்னுல் நிற்க அஞ்சும் அக்கினி அவனுக்குத் துணே நிற்க, கிணறுகளிலெல்லாம் இரத்த நீர் சுரக்க இன்னும் அணேயவில்லேயே. விசேஷமாக ஒன்றும் செய்ய முடியா விட்டாலும் அக்குரங்கையாவது கொல்ல முடியாமல் போய் விட்டதே. சரி இனிமேல் என்ன செய்யவேண்டும் என்பதை யோசிததுக கூறுஙகள'' என்ருன்.

பிரகஸ்தன், மகோதரன, வசசிர தநதன, துன்முகன, பிசாசன், சூரிய சத்துரு, மகாபர்சுவன், யக்ஞசத்துரு, தூமிராட்சன், மற்ற மந்திரிகள் எல்லோரும் தம் தம் எண்ணங்களே வெளியிட்டபின, கும்பகர்ணன் பேசலுற்ருன். ''அண்ணு! நாஎமுகனின் பேரனுை தசமுகன வேதங்களுக்கெல்லாம் இலக்கணமானவர் என்பதை அறியாதவர் யார்? தாங்கள் பிரம்ம குலத்தில் பிறநது ஆயிரம் சாகைகளோடு கூடிய வேதங்களேயுணாந்து, தீயென்று தெரிந்தும் அது சிவப்பாகயிருக்கிற தென்று அதைவிரும்பினுல், அதன் விளேவு இவ்வளவோடுதானு நிற்கும்? என்றைக்குப் பிறா மனேவியைக் கதறக் கதறத் தூக்கி வந்து, சிறையிலிட்டு அழ வைத்தீர்களோ, அன்றைக்கே அழிந்தது உங்கள் புகழ். நம் எண்ணம் ஒன்று, செயல் வேறு. ''பேசுவது மான மிடை பேணுவது காமம், கூசுவது மானிடரை. நன்று நம்கொற்றம்'' என்று இடித்துரைத்து மேலும் இராமன் கானகத்தில் தனி ஒருவனுய் நின்றே கரணுதியரையும், வலிமிக்க சேனேகளேயும கொன்று ஒழித்தான். ஆகையால் இப்பொழுதே சென்று அவர்களே ஒழித்துக் கட்டவேண்டியது நமது கடமை'' என்ருன். இந்திரஜித்தோ ''இதோ பாருஙகள் அந்த நரர்களேயும் வானரங்களேயும் ஒரே நாளில் யமனுக்கு விருந்தளித்து வருவேன'' எனருன்.

திரு. கே வி இராஜன்,
மதுரை.

இதையெல்லாம் பார்த்துக்கொண்டிருந்த வீபீடணன் கோபம் தாங்காமல்,

'' எந்தைதந்யாயுநீ பெம் முனிதவம்
வந்தனேத தெய்வநீ மற்றுமுறறு நீ
இநதாப் பெ நமபதமிழக்கின் ருயென
நொந்தனெ ஞகலின் நுவலவ
தாயினேன். ''

—கம்பர் யுத்த காண்டம்.

''நான் கூறுவதைக் கேளுங்கள்: என் தந்தை, தாய், தமையன், தவத்தாற்பெறும் தெய்வம் எல்லாம் நீங்கள் தான். இந்திரனேவிட மேலான பதவியை வகிககும் நீங்கள இவைகளே இழக்கப் போகிறீர்களேயென நொந்து கூறுகிறேன். உலக மாதாவான ஜானகியாரின் கற்புத்தீயால் இலங்கை வெந்ததேயொழிய, ஒரு குரங்கினுல் அல்ல. அண்ணு, அதிசயமான ஒரு சொல் வழங்கி வருகிறது. இலங்கை வேந்தன் பெரும் தவமெல்லாம் ஒரு மானிட மடந்தையால் அழியப் போகிறதுயென்று. நீங்களோ, தவம்செய்து வரம் பெற்ற காலத்தில், மனிதர்பால் வெற்றியை கேட்பீர்கள் இல்லே. ஆகையால் ஏழு உலகங்களேயும் ஆளும் நீங்கள் ஆயிரம் தோள்களேயுடைய கார்த்த வீரியார்ஜுனனுல், ஒரு மனித வர்க்கம் ஆனபடியால் தோல்வியுற்றீர்கள். கயிலே மலேயைத் தூக்கும் பொழுது அங்குள்ள நந்தியை 'குரங்கு முகமே' என்று ஏச அவர் கொடுத்த சாபத்தால் வாலியென்னும் குரங்கினிடத்து பெரிய தோல்வியை அடைந்தீர்கள். வேதவதி என்னும் ஒரு தெய்வக் கற்பினுளே நீங்கள் கை தொட்டு இழுத்து இழிவுபடுத்தியதால், அவள் அன்று சொன்னபடி இன்று சீதையாக அவதரித்திருக்கிருள். இந்த மானிடர் இருவரும் யார் என்று உங்களுக்குத் தெரியுமா?

இந்திரனே வென்று தேவலோகத்திணேக்கைப்பற்றி கொடுங்கோல்

புரிநத சம்பராசுரனைக்கொன்று இந்திரனுக்கு அரசளித்தார் தசரத சக்கரவாத்தி. அவர் குலத்தில் சாகுத்தன் என்னும் ஓர் அரசன் இந்திரனையே ரிஷபமாகக் கொணடு, அதன் மீதேறி வெற்றி கண்டான். அதனுல் இந்த இராமனுக்கு காகுததன் என்ற பெயருமுண்டு. ஒரு நாள், தர்மம் குறைந்து, கொடுங்கோனமை தாணடவமாட பூமாவதி தன் சக்திகளையெல்லாம் உள்ளிழுத்துக் கொண்டாள். அதனுல் வளம் குன்றி பஞ்சம் உண்டாக பிருது என்னும் ஓர் அரசன், இவர்கள் குலத்தில் பிறந்தவன், பூமியையடக்கி, அதனிடமிருந்து வளங்களையெல்லாம் மீண்டும் வரச்செய்து வாழ்நததால் பூமிக்கு பிரத்வி என்ற பெயா ஏறபடடது. மற்ருெரு சகரர் என்னும் மன்னரின் புதல்வரால் இக் கடல்கள் தோண்டப்பட்டதால, சாகரம் என்ற பெயர் உண்டாயிற்று. இத் தகைய மகாவீரர்களை தோற்றுவித்த சூரிய வம்சத்தில் தோன்றியவர்; பத்து திக்குகளிலும் தங்குத் தடையின்றிச் செல்லும் இரதத்தையுடையவரான தசரதச் சக்கரவர்த்தியின் புதல்வர்கள் இவர்கள். முனிவர், தேவா, பரமஞானிகள் வேண்டு கோளின்படி நம் தீவினையும் உடன சேர, நம் முன்னே இப்படி மனிதராய் வாழகிருர்கள.

''எறுழ்வலிப் பொருவிருே ளவுணரோ
டமரர் பண்டுகல் செய் காலதது
உறுதிறற்கலு ழன்மீ தொருவனின்
அமர் செய்தானுடைய வில்லும்
தெறு சினத்தவர்கண் முப்புரம்
நெருப்புறவுருத் தெய்தவமபும
குறுமுனிப் பெயரிஞ னிறை தவர்க்
கிறைதரக்கொண்டு நினருன ''

—கம்பர் யு. காண்டம்.

கருடன் மீதேறி அரக்கர்களையெல்லாம் தனித்து நின்றே கொன்ற மகா விஷ்ணுவின் வில்லேயும்,திரிபுரமெரித்த சிவபெருமானின் அம்பையும், அகத்திய முனிவரால் கொடுக்கப்பட்டவர்கள். இராகவனது ஒரே பாணம் பாற் கடலைக் கடைந்த வாலியின் பலத்தை ஒடுக்கிற்று. பகற்காலச் சந்திரன் போல் ஒளி குன்றியிருந்த தேவர்கள் இப்பொழுது சாற்காலச் சந்திரன் போல் ஒளி பெற்று விளஙகுகிருர்கள். இப்பொழுதெல்லாம் யமன், தைரியமாய் இலங்கையை அடிக்கடி சுற்றிப் பாரத்துச் செலலுகின்ருன். இன்னும் இவ்விரு வீரர்களுக்கும் துணை நிற்கும் வானரஙகள் யார் தெரியுமா! நம் பகைவர்களான தேவர்களே! ஆகையால, சீதையை இராமனிடம் சேர்த்தலே நன்று'' என்ருன்.

'' இசையுஞ் செய்கையும் உயர்குலத்
தியற்கையுமெஞ்ச
வசையுங் கீழ்மையு மீக்கொளக்
கிளையொடு மடியாது
அசைவில கறபினவ் வணங்கை
விட்டருளுதி யிதன்மேல்
விசையமில்லெனச் சொல்லின
னறிஞரின் மிக்கோன்''

—யுத்த காண்டம்.

(27-ம் பக்கம் பார்க்க)

# சிறையிருந்த செல்வி

பகுதி – 1

தாய் ஒருத்தி தன் குழந்தைகளைக் காப்பாற்ற, வளர்க்க, ஆளாக்க எத்துணை பாடுபடுகிறாள்! தன் பிள்ளைகளின் துயரைக் களையவும், நன்னெறியில் செலுத்தவும், நல்லனவற்றைக் கற்பிக்கவும், நல் வாழ்வை அளிக்கவும் தன்னை எவ்வளவு வருத்திக் கொள்கிறாள்! பத்து மாதம் சுமந்து பெற்று, தன் உதிரத்தையே பாலாக்கி ஊட்டி, தாலாட்டி, பாராட்டி, நோய்களிடமிருந்து 'கண்ணை இமை காப்பது போல்' காத்து வளர்க்கிறாள்.

இங்ஙனமே உலக பிராட்டியும் தன் குழவிகளாம் இம்மாநில மக்களின் துயரைக்களையவும், அவர்கள் தீய நெறியைவிட்டு நன்னெறி படரவும், தீயவர்கள் அழிந்து, அதன் மூலம் பல நல்லவர்கள் நல் வாழ்வு பெறவும் சீதையாக இவ்வுலகத்தில் அவதரித்துப் பலவித இன்னல்களை ஏற்கிறாள்.



இராமாவதாரக் குறிக்கோள்களான இராவணன் முதலான அரக்கர்களின் அழிவும், தேவர், மக்கள் இவர்களின் விடுதலையும், மாநில மக்கள் தீய குணங்களை விடுத்து நல் வழிப் படர வைத்தலும் ஆகியவற்றை நிறைவேற்ற சீதையாகப் பிராட்டியார் அனுபவித்த துன்பங்கள் அளவிட வொண்ணா. இராவணன் முதலான அரக்கர்கள் ஒழிய தானே ஒரு காரணமாய் அமைகின்றாள்.

''அறன் வரையா னல்ல செயினும்
பிறன் வரையாள்
பெண்மை நயவாமை நன்று''.
(திருக்குறள்-150)

என்று திருக்குறள் விளம்பா நிற்க, இராவணனும், வாலியும் இதற்கு மாறாக நல்ல அறங்களை உணர்ந்து, பல நற்செயல்களைச் செய்தவர்களாக இருப்பினும் பிறனில் விழைந்த ஒரே பாவத்திற்காக-குற்றத்திற்காக அழிக்கப்படுகின்றனர். இவர்கள் மூலம் உலகுக்கு நல்லதோர் நீதியை நிலை நாட்ட, மக்களை நன்னெறிப் படுத்த, தானே வீண் பழி பாவங்களைச் சுமந்து துயரத்தின் குடியிருப்பாக விளங்குகின்றாள் சீதை.

சீதை அனுபவித்த துன்பம்தான் எத்துணைக்கொடியது! எண்ணுங்கால் நம் நெஞ்சு அழலிலிட்ட மெழுகாய் உருகுகிறது. பிராட்டியின் துயரம், அவதாரத்திற்கு முன்னரே தொடங்கி விடுகிறது. திருமால், தான் இராமனாக அவதரிக்கையில் ஆதிசேடன், சங்கு, சக்கரம் இவையெல்லாம் தம்பியராக தன்னுடன் பின் தொடரப் பிராட்டியை மட்டும் தனியாக விட்டு விடுகிறார்.

சீதை இராமபிரானைப் பார்க்கும் வரை தனித்தே விடப்படுகிறாள். இராமனைப் பார்க்காத வரையில் ஒருவாறு மாயையில் இருக்கும் சீதை, இராமனைக் கண்டவுடன் அவன் மீதான காதலால் துயரடையத் தொடங்கிவிடுகிறாள். கவிச்சக்கரவர்த்திக் கம்பன், சீதை இராமன் மீது காதல் கொண்டு விரக வேதனையால் அரற்றித் துயரடைந்ததைப் பற்றிப் பலவாறாகக் கூறிச் செல்லுகிறான். திருமணம் நடந்த பின்னர் சில தினங்களே இராமனும் சீதையும் கூடிக் கணவன் மனைவியராய் வாழும் பேறு பெறுகின்றனர். ஊழ் அவர்களின்

திரு. என. கிருபானந்தன்,
M A., BSc, Jr Dip-in-Ling;
திருப்பதி.

வாழ்வில் கைகேயியின் வரங்களின் உருவத்துடன் புகுகிறது. தன்னைத் தேடிவந்து தண்டனிட்டி தொழ வந்த இராமனிடன் கைகேயி தசரதன் ஆணைகளாகக் கூறியது என்ன ?

''ஆழிசூ ழுலக மெல்லாம பரதனே
யாள நீ போய்த்
தாழிருஞ் சடைக டாங்கித் தாங்கருந்
தவமேற் கொண்டு
பூழிவெங் கான நன்னிப் புண்ணிய
நதிகளாடி
யேழிரண் டாண்டின் வாவென்
றேவின னரசனென்றாள்''.
(அயோ. கைகேயி சூழ்வினைப்படலம்-107)

ஒன்று, பரதன் அரசாள வேண்டும். இரண்டு, இராமன் பதினான்கு ஆண்டுகள் கானகம் சென்று தாழிருஞ் சடைகள் தாங்கித் தாங்கரும் தவம் மேற்கொணடு 'வாழ' வேண்டும் இங்குக் கைகேயியின் மதிநுட்பம் எண்ணி உணரத்தக்கது. 'இராமன் கானகம் புக்கின் கற்புக்கரசியாம் சீதை இங்கே தங்காள். அவனுடன் தானும் கானகம் செலவாள். அவர்களை அஙகே இணைந்து வாழுமாறு விடுத்தால் அவர்களுககுக் குழந்தை பிறக்க நேரிடலாம். அதனால் பின்னர் தன் மகன் பரதனுக்கும் அவர்களுக்கும் அரச பதவிப் போட்டி ஏற்படக்கூடும்' என்ற எண்ணங்கள் அவள் மனதில் தோன்றியதோ, அல்லது தோற்றிவிக்கப்பட்டதோ என்னவோ? அதனால் தான் இராமன் கானகத்தில துறவியாக வாழ்தல் வேண்டும் என்று கோரினாள் எனலாம்.

ஸ்ரீ வேதாந்ததேசிகர்—ஸ்ரீ கல்யாண வேங்கடேஸ்வரசுவாமி கோயில்-நாராயணவனம்



தன் கண்ணுக்கினிய கணவனுடன கானகம் சென்ற கறபுக்கரசியை, அவனுடன் உடலால் ஒன்ற முடியாதவாறு அவ்வரம் தடுக்கிறது. பல நாட்கள் பசித்தவன் முன், அவனுக்கு மிகவும் விருப்பமான நல் உணவை, இனிய, மணங்கமழும் உணவை அவன் கையினருகிலேயே வைத்து விட்டு, உண்ணக் கூடாது என்று தடையிட்டால் அவன் நிலைமை எவ்வாறு இருக்குமோ அதே நிலையில் சீதை தன் இன்னுயிர் அன்புக் காதலனுடன் உடலால் கூடிக் குலாவ இயலாது 'வாழுகிறாள்'. வாடுகிறாள். ஆயினும், தன் கணவன் தன்னருகிலேயே இருககப் பெற்ற அந்த இன்பத்தோடு சீதை மனம் தேறித் துன்பத்தை மறந்து, ஒருவாறு மகிழ்வுடனே இருக்கிறாள். நல்ல உணவு வகைகளைத் தேடி வர இராம இலக்குவனர்களுக்கு ஆற்றல் உண்டு. ஆனால் அவர்கள் நல்லுணவு உண்டு, நல்ல இடத்தில் தங்கி வாழ, தாயான, கைகேயியின் வரம் தடை செய்து, துரத்துகிறது. காட்டில் கிடைக்கும் காய், கனி, இலை, வேர்களை உண்டு முனிவர்களைப்போல் வாழ்கின்றனர். இதனால் தான் சீதையும் பின்னர் அசோகவனத்தில் சிறையிருந்த சமயத்திலும் ''காட்டில் உண்ணுகின்ற மென்மையான இலையுணவு முதலியவற்றை யாவர் எடுத்துப் பரிமாற இராமபிரான் அமுது கொள்வார்?'' (''அருந்து மெல்லட காரிட வருந்து மென்றழுங்கும்'' சுந்தர, காட்சிப்படலம். 15) என்று எண்ணி வருந்துகிறாள்.

கானகத்தில் இராமனோடு உடலால் கூடி வாழச் சூழ்நிலையும், காட்சிகளும் இருக்கப்பெறினும் இயலாத சீதை, இராமன் அருகில் இருந்து அவனது தேன் போன்ற, நம்மால் கற்பனை

யாலும் எண்ணிப் பார்க்க இயலாத, இன்பப் பேச்சைக் கேட்டாவது இன் புற்றிருந்த நிலையில், இராவணனால் சிறை யெடுக்கப்பட்டு, இராமனை விட்டுப் பிரிக்கப்படுகிறாள். இராவண னின் காமச் சொற்களாம் தீச்சரங் களால் குற்றுயிராகத் துளைக்கப்படு கிறாள்.

சீதையை பிரிந்ததால் இராமனும் துயருறுகிறான் எனினும் அத்துயர் சீதையின் பெருந்துயருக்கு முன் மிக வும் குறைந்ததே. இராமனுக்குச் சுக்ரீவன், அனுமன், விபீடணன் முத லான பல நண்பர்கள் கிடைக் கின்றனர். அதுமட்டுமல்ல. இடை யில் வாலி வதம், வானரங்களைப் பல திசைகளுக்கும் அனுப்பிச் சீதையைத் தேடல் முதலான பல செயல்களும் நடைபெறுகின்றன. துயருற்றுத் துடிக்கும் தருணத்தில், மனதை வேறு ஏதாவது செயலில் ஈடுபடுத்தும் போது திசை திருப்பும்போது - நம் துன்பங்கள் சற்றுக் குறைவதில்லையா? இங்ஙனமே இராமனும் சற்று மனத் துயரை மறந்து, வேறு வகையில் மனத்தை ஈடுபடுத்த அவனுக்குவாய்ப் புக்கள் கிடைக்கின்றன. மேலும் இராமனுக்கு ஆறுதல் கூறவும், உதவி கள் புரியவும், நம்பிக்கையூட்டவும் இலக்குவன், அனுமன், சுக்ரீவன், விபீடணன் முதலான பலர் இருக்கின் றனர். ஆனால சீதையின் நிலையென்ன?

கற்பின் செல்வியான அவள் தன் கணவனிடமிருந்து ஒரு காமுகனால் சிறை யெடுக்கப்பட்டாள். உலகத் தீச்சொல் தன்னையும், இராமனையும் சுடுமோ! பழி நம்மை வந்தடையுமோ? என்ற கலக்கங்கள் ஒரு புறம். இரா வணனின் வற்புறுத்தலும், தீச் சொற் களும் ஒரு புறம் வருத்தா நிற்கத் தன்னை இராமபிரான் கண்டுபிடிக்க இயலுமா? தன்னை மீட்டுச் செல்ல வருவானா? முதலான ஐயங்கள் மற் றொரு பக்கம் தோன்றி அவளை வருத்து கின்றன. அவள் மனதில் மாபெரும் சுழற் காற்றே'உருவாகி அவளை அலைக் கழிக்கிறது. அவள் அங்ஙனம் ஒரு துய ரோவியமாக நின்ற காட்சி கம்பனின் உள்ளத்தை உருக்குகிறது.

"ஆவி யந்துகில புனைவதொன்
றன்றிவே றறியாள்
தூவி யன்னமென் புனலிடைத்
தோய்கிலா மெய்யாள்
தேவு தெண்கட லமிழ்துகொண்
டனங்கவேள் செய்த
ஓவி யம்புகை யுண்டதே
யொக்கின்ற வுருவாள்"

*(சுந்தர, காட்சிப்படலம்-11)*

மேலும், கடும்புலிக் கூட்டத்தில் அகப் பட்ட இளம் பெண்மானைப் போன்று சீதை, "துயிலெனக்கண்க ளிமைத்தலு முகிழ்த்தலுந் துறந்தாள்". இராவ ணனின் அசோக வனத்தில் சிறை யிருந்த ஒன்பது மாத காலமும் சீதை உறங்கவில்லை. அதனால்தான் திரி சடையிடம் தான் சில நன்னிமித் தங்களைக் கண்டதாகக் கூறுகிறாளே யன்றித் திரிசடையைப் போன்று கனவு கண்டதாகக் கூறுவதில்லை. தூங் கினால் அல்லவா கனவு வரும்? இதனைப் பற்றி திருமுருககிருபானந்த வாரியார் அவர்கள் கூறிய கருத்து இங்குக் குறிப்பிடுவது நன்று.

"சீதை இராவணனின் சிறையிலி ருந்த ஒன்பது மாதங்களும் உறங்கவே இல்லையாம். இது முடியுமா? ஏன் முடியாது? உதாரணமாக ஒன்றைப் பார்ப்போம். நீங்களே ஒரு ஊருக்கு அவசர வேலை நிமித்தமாகச் செல்கி றீர்கள். அங்குள்ள மூன்று நாட்களும் நண்பர் ஒருவர் வீட்டில் தங்க ஏற்பாடு என்று வைத்துக்கொள்வோம். முதல் நாள் இரவு, பகலெல்லாம் சுற்றிய வேலைக் களைப்புடன் படுக்கையில் படுக்க முனையும் சமயத்தில் நண்பர் வந்து "அன்பரே ஒன்று கூற மறந்து விட்டேன். இந்த வீட்டை அடுத் துள்ள புதரினின்று தினந்தோறும் ஒரு நல்லபாம்பு இந்த ஜன்னல் வழி யாக உள்ளே புகுந்து அந்த ஜன்னல் வழியே போய் விடும். வெறும் சத்தம் போடுமே யன்றிக் கடிக்காது. இது வரை யாரையும் கடிக்கவில்லை. ஆகவே பயமின்றி உறங்குங்கள்" என்று கூறிவிட்டுச் சென்று விடுகிறார் என்று வைத்துக்கொள்வோம். நல்ல தூக்கமே வந்தாலும் உங்களால் தூங்கமுடியுமா? எப்போது அந்தப் பாம்பு வருமோ? என்ன செய்யுமோ? என்ற பயத்துடன் தூங்காது விழித் திருப்பீர்கள் அல்லவா? அந்த இரவு மட்டுமல்ல. அடுத்த இரண்டு இரவும் தூக்கமாவது! உயிர் பிழைத்தால் போதும் என்று விழித்திருக்க மாட்டீர் களா? இதுபோலத்தான் தீயவனை இராவணன் நேரடியாகத் தன் கற்புக் குக் களங்கம் செய்ய இயலாது என்று தெரிந்தாலும், அவன் எப்பொழுது வந்து விடுவானோ? என்ன தீச்சொல் சொல்லுவானோ, என்ன தீங்கு இழைப் பானோ என்ற கவலைகளால் சூழப்பட் டிருந்த சீதை எப்படி உறங்கியிருக்க முடியும்? ஒன்பது மாதங்களென்ன. ஒன்பது ஆண்டுகள் கூட விழித்திருப் பாள்". மேலும் இராமனின் பிரிவுத் துன்பம் வேறு. இங்ஙனம் தூக்க மின்றித் துயரச் செல்வியாக விளங் கும் சீதை, இராமபிரானை நினைந்து அவனிருந்த திசை நோக்கி வணங்கு தலும், கீழே மண்ணில் விழுந்து புரளு தலும், புலம்புதலும், அஞ்சுதலும், ஏங்குதலும், தளர்தலும், தள்ளாடு தலும், பெருமூச்சு விடுதலும், கண் ணீர் விடுதலும் ஆகிய இச்செயல்களை

*(22-ம் பககம் பார்க்க)*



நம்மாழ்வார்—திருப்பதி.
S. V. K. S. ஸ்ரீநிவாசன்-திருப்பதி.

# திருமலை திருப்பதி தேவஸ்தானம், திருப்பதி

ஸ்ரீ வேங்கடேஸ்வரரின் தரிசனத்திற்காகத் திருமலைக்கு வரும் யாத்திரிகர்கள் அதிக நேரம் 'க்யூ'வில் நிற்காவொண்ணம், அவாகளுக்கு விரைவான தரிசன வசதி கிடைக்கும் வகையில் கீழ்வரும் மாற்றங்களை திருமலை திருப்பதி தேவஸ்தானம் மேற்கொண்டுள்ளது.

1. மூன்று தரிசனங்களுக்கு (தோமாலா, அர்ச்சனை, ஏகாந்த சேவை) ஐந்து நபர்கள் அனுமதிக்கப்படும்படியான ரூ. 200/-க்கு விற்கப்படும் அமந்த்ராணேற்சவம் டிக்கெட்டிற்கு இனிமேறகொண்டு இரணடு நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர். இதனுல் பலர், குறிப்பிட்ட எண்ணிகைக மட்டுமே விற்கப்படும் அவ்டிக்கெட்டுகள் வாங்க வாயப்பேற்படும்.
2. ஸர்வ தரிசனத்திற்காகத் திருமலைக்கு வரும் யாததிரிகர்களுககு உதவும் வகையில், ரூ. 4/-க்கு நபர் ஒருவர் அனுமதிக்கும்படியான ஸேவாந்தார தரிசன டிக்கெட்டுகள் விற்கப்படுவது தற்போது நிறுத்தபபட்டுள்ளது.
3. புதன் கிழமைகளில் ஸகஸ்ர கலஸாபிஷேகம நடைபெற்றுலும் ஸர்வ தரிசனம் காலை 8 மணிக்கே ஆரம்பிக்கப்பட்டுவிடும. அது போன்றே வியாழக் கிழமைகளில் திருப்பாவாடையும் வெள்ளிக்கிழமைகளில அபிஷேகமும் நடைபெற்றுலும் அக்கிழமைகளில் ஸர்வ தரிசனம் முறையே காலை 8 மணிக்கும, காலை 10 மணிக்கும ஆரம்பிககப்பட்டுவிடும்.
4. ஸர்வ தரிசன நேரங்களினபோது விறகப்படும், நபர் ஒருவர் அனுமதிககப் படியான ரூ 25/-க்கு சிறப்பு தரிசன டிக்கெட் வாஙகும் நபர்களுக்காகத் தனியாக நேரம் ஒதுக்காமல, அவர்களை துவஜஸ்தம்பம் அருகே அனுமதிக்காது கோயில் முகத்துவாரம் அருகே, ஸர்வ தரிசன 'க்யூ'வில் சேர்ந்து செல்ல அனுமதிக்கப்படுவர்.
5. நபர் ஒருவர் அனுமதிக்குமபடியான ரூ 25/-க்கு கிடைக்கும சிறபபு தரிசன டிக்கெட்டுகள் திருமலையிலும மற்றும நாட்டிலுள்ள ஆந்திரா பாங்கின் சில குறிப்பிட்ட கிளை அலுவலகங்களிலும் விற்பனைக்குக கிடைக்கும்.
6. நாட்டின் வெகு தூரத்திலிருந்து திருமலைக்கு வருகை புரிந்து கோவிலில கல்யாணுற்சவம் நடத்தும் கிருஹஸ்தர்களுக்கு உதவும வகையில், அவ் ஆர்ஜித சேவை தறபோது மதியம 1 மணியிலிருநது மாலை 3 மணிக்குள் நடத்தப்படும்.

---

1-3-79 முதற்கொண்டு திருமலை ஸ்ரீ வேங்கடேஸவர சுவாமி கோவிலின நிகழ்ச்சி நிரல்கள் கீழ்வருமாறு மாற்றஞ் செயயப்பட்டுள்ளன.

### சனிக்கிழமைகளில்; ஞாயிற்றுக்கிழமைகளில்; திங்கட்கிழமைகளில்; செவ்வாய்க்கிழமைகளில்:

காலை

3-00 முதல் 3-30 வரை : சுப்ரபாதம் (ரூ. 25/- டிக்கெட் வாங்கிய நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்)

3-30 முதல் 3-45 வரை : சுத்தி

3-45 முதல் 4-30 வரை : தோமாலா சேவை (தனி. ரூ.4/- டிக்கெட்டுகள் மற்றும் ரூ. 25/-க்கு விற்கப்படும் சிறப்பு தரிசன டிக்கெட்டுகள் விற்பனைக்கு இல்லை.)

4-30 முதல் 4-45 வரை : பங்காரு வாயிலில் கொலுவு, பஞ்சாங்க ஸ்ரவணம்.

4-45 முதல் 5-30 வரை : முதல் அர்ச்சனை. அதாவது ஸகஸ்ரநாம அர்ச்சனை (தனி) (ரூ.4/- டிக்கெட்டுகள் மற்றும் ரூ. 25/- டிக்கெட்டுகள் (சிறப்பு தரிசனம்) விற்பனைக்கு இல்லை.)

5-30 முதல் 6-00 வரை : முதல் மணி, பலி, சாத்துமுறை.

6-00 முதல் மதியம் 12-00 வரை : ஸர்வ தரிசனம்

மதியம் 12-00 முதல் 1-00 வரை : சுத்தி, இரண்டாவது அர்ச்சனை (ஏகாந்தம்) இரண்டாவது மணி.

மாலை

1-00 முதல் இரவு 8-00 வரை : ஸர்வ தரிசனம்

1-00 முதல் இரவு 8-00 வரை : சர்க்கார் கல்யாணுற்சவம், ஆர்ஜித பிரம்மோற்சவங்கள், வாகன சேவைகள், சர்க்கார் ஊஞ்சல் சேவை முதலியன. (சர்க்காா மற்றும் ஆர்ஜித தெப்போற்சவம் ஏதாகிலும் இருப்பின் செவ்வாய்க் கிழமைகளில் மட்டுமே)

இரவு

8-00 முதல் 9-00 வரை : சுத்தி, இரவு கைங்கர்யம் (ஏகாந்தம்)

9-00 முதல் நள்ளிரவு 12-00 வரை : ஸர்வ தரிசனம்

நள்ளிரவு 12-00 முதல் காலை 12-30 வரை : சுத்தி, ஏகாந்த சேவைக்கான ஏற்பாடுகள்.

காலை 12-30க்கு: ஏகாந்த சேவை (தனி. ரூ. 4/- டிக்கெட்டுகள் ரூ. 25/- டிக்கெட்டுகள் விற்பனைக்கு இல்லை)

---

### புதன்கிழமைகளில் - ஸகஸ்ரகலஸாபிஷேகம்நடைபெறுவதால்

காலை

3-00 முதல் 3-30 வரை : சுப்ரபாதம் (ரூ. 25/- டிக்கெட்டுகள் வாங்கிய நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்.)

3-30 முதல் 3-45 வரை : சுத்தி

3-45 முதல் 4-30 வரை : தோமாலா சேவை (தனி. ரூ. 4/- டிக்கெட்டுகள் மற்றும் ரூ. 25/- சிறப்பு தரிசன டிக்கெட்டுகள் விற்பனைக்கு இல்லை.)

4-30 முதல் 4-45 வரை : பங்காரு வாயிலில் கொலுவு, பஞ்சாங்க ஸ்ரவணம்

4-45 முதல் 5-30 வரை : முதல் அர்ச்சனை, (சகஸ்ரநாம அர்ச்சனை) (தனி) (ரூ. 4/- டிக்கெட்டுகள் மற்றும் ரூ. 25/- சிறப்பு தரிசன டிக்கெட்டுகள் விற்பனைக்கு இல்லை.)

5-30 முதல் 6-00 வரை : முதல் மணி, பலி, சாத்து முறை, சேவைக்கான ஏற்பாடுகளை மேற்கொளல் முதலியன.

6-00 முதல் 8-00 வரை ; ஆர்ஜித ஸகஸ்ர கலஸாபிஷேகம், சுத்தி, இரண்டாவது அர்ச்சனை (ஏகாந்தம்) மணி.

8-00 முதல் இரவு 8-00 வரை : ஸர்வ தரிசனம்

மதியம் 1-00 முதல் இரவு 8-00 வரை: சர்க்கார் கல்யாணுற்சவம், ஆர்ஜித பிரம்மோற்சவம், வாகன சேவைகள், சர்க்காா ஊஞ்சல் சேவை முதலியன.

இரவு

8-00 முதல் 9-00 வரை : சுத்தி, இரவு கைஙகர்யம் (ஏகாந்தம்)

9-00 முதல் நள்ளிரவு 12-00 வரை : ஸர்வ தரிசனம்

நள்ளிரவு 12-00 முதல் காலை 12-30 வரை: சுத்தி, ஏகாந்த சேவைக்கான ஏற்பாடுகள்

காலை 12-30க்கு: ஏகாந்த சேவை. (தனி. ரூ. 4/- டிக்கெட்டுகள் மற்றும் ரூ. 25/- டிக்கெட்டுகள் விறபனைக்கு இல்லை.)

---

## வியாழக்கிழமைகளில் (திருப்பாவாடை நடைபெறுவதால்)

காலை

3-00 முதல் 3-30 வரை: சுப்ரபாதம் (ரூ. 25/- டிக்கெட்டுகள் வாங்கிய நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்)

3-30 முதல் 3-45 வரை: சுத்தி

3-45 முதல் 4-30 வரை: தோமாலா சேவை (தனி) (ரூ. 4/- டிக்கெட்டுகள், ரூ.25/- டிக்கெட்டுகள் விற்பனைக்கு இல்லை.)

4-30 முதல் 4-45 வரை: பங்காரு வாயிலில் கொலுவு, பஞ்சாகஸ்ரவணம்.

4-45 முதல் 5-30 வரை: முதல் அர்ச்சனை; சகஸ்ரநாம அர்ச்சனை (தனி) (ரூ 4/- டிக்கெட்டுகள், ரூ 25/- சிறப்பு தரிசன டிக்கெட்டுகள விற்பனைக்கு இல்லை)

5-30 முதல் 6-00 வரை: முதல் மணி, பலி, சாத்துமுறை.

6-00 முதல் 8-00 வரை: சாலிம்பு, 2-வது அர்ச்சனை (ஏகாந்தம்) திருப்பாவாடை அலஙகாரம், மணி முதலியன.

8-00 முதல் இரவு 8-00 வரை: ஸர்வ தரிசனம

மதியம் 1-00 முதல் இரவு 8-00 வரை: சர்க்கார் கல்யாணுற்சவம், ஆர்ஜித பிரம்மோற்சவம், வாகன சேவைகள், சர்க்கார் ஊஞ்சல் சேவை முதலியன.

இரவு 8-00 முதல் இரவு 10-00 வரை: பெரிய சுத்தி, இரவு கைங்கர்யங்கள், பூலங்கி சமர்ப்பணை, இரவு மணி ஏகாந்தம்.

இரவு 10-00 முதல் நள்ளிரவு 12-00 வரை; பூலங்கி சேவை.

நள்ளிரவு 12-00 முதல் காலை 12-30 வரை: சுத்தி, ஏகாந்த சேவைக்கான ஏற்பாடுகள்.

காலை 12-30 க்கு: ஏகாந்த சேவை (தனி) (ரூ. 4/- டிக்கெட்டுகள், ரூ. 25/- டிக்கெட்டுகள் விற்பனைக்கு இல்லை.

---

## வெள்ளிக்கிழமைகளில் (அபிஷேகம் நடைபெறுவதால்)

காலை

3-00 முதல் 3-30 வரை: சுப்ரபாதம். (ரூ. 25/- டிக்கெட்டுகள் வாங்கிய நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்.)

3-30 முதல் 5-00 வரை: சாலிம்பு, சுத்தி, நித்ய கட்டளை கைங்கர்யங்கள், அபிஷேகத்திற்கான ஏற்பாடுகள்.

5-00 முதல் 7-00 வரை: அபிஷேகம். (ரூ. 4/- டிக்கெட்டுகள், ரூ. 25/- சிறப்பு தரிசன டிக்கெட்டுகள் விற்பனைக்கு இல்லை)

7-00 முதல் 8-30 வரை: ஸமர்ப்பணை முதலியன.

8-30 முதல் 9-30 வரை: தோமாலா சேவை, அர்ச்சனை (தனி) (ரூ. 4/- டிக்கெட்டுகள், ரூ. 25/- சிறப்பு தரிசன டிக்கெட்டுகள் விற்பனைக்கு இல்லை )

9-30 முதல் 10-00 வரை: 2வது மணி, பலி, சாத்துமுறை.

10-00 முதல் இரவு 8-00 வரை: ஸர்வ தரிசனம்

மதியம் 1-00 முதல் இரவு 8-00 வரை: சர்க்கார் கல்யாணுற்சவம், ஆர்ஜித பிரம்மோற்சவம், வாகன சேவைகள், சர்க்கார் ஊஞ்சல் சேவை முதலியன.

இரவு 8-00 முதல் இரவு 9-00 வரை: சுத்தி, இரவு கைங்கர்யங்கள்.

இரவு 9-00 முதல் நள்ளிரவு 12-00 வரை: ஸர்வ தரிசனம்

நள்ளிரவு 12-00 முதல் காலை 12-30 வரை; சுத்தி, ஏகாந்த சேவைக்கான ஏற்பாடுகள்.

காலை 12-30க்கு: ஏகாந்த சேவை (தனி) (ரூ. 4/- டிக்கெட்டுகள், ரூ. 25/- டிக்கெட்டுகள் விற்பனைக்கு இல்லை.)

(ஒப்பம்) பி. வி. ஆர். கே. பிரஸாத்,
செயலாட்சித் தலைவர்.
தி. தி. தேவஸ்தானம் திருப்பதி.

(19-ம் பக்கத் தொடர்ச்சி)

யன்றி வேறு செயலைச் செய்ய அறியா தவளாகி அவதிப்படுகிருள்.

மேலும் அவள் மனதில் பல ஐயங்கள்: 'மானின் பின்சென்ற இராமனை இலக்குவன் கண்டானு? என்னை இராவணன் எடுத்து வந்ததை அவர்கள் எங்ஙனம் அறிய இயலும்? இடையில் என்னைக் காப்பாற்ற முயன்ற சடாயு இராம இலக்குவணர்களைக் காணுமலேயே இறந்து விட்டாரோ? நான் இராவணனுல் எடுத்து வரப்பட்டதை ஒரு வேளை அறிந்து கொண்டாலும் அரக்கர்களாகிய இவர்கள் என்னை இந்நேரம் உயிருடன் வைத்திருக்க மாட்டார்கள், கொன்று தின்றிருப்பார்கள் என்று இராமன் எணணி என்னைத் தேடுவதை விட்டு விட்டானே? பரதன் மீண்டும் இராமனிடம் வந்து வேண்டி வற்புறுத்தி அயோத்திக்கு அழைத்துச் சென்று விட்டானே? ஆனல் இராமபிரான் பதினன்கு ஆண்டுகள் நிறைவு பெறும் வரை அயோத்திக்குச் செல்லமாட்டாரே! ஏன் இன்னும் என்னைத் தேடி வரவில்லை என்று இவ்வாறெல்லாம் மனப் போராட்டத்துடன், தனிமையில் வாடி வதங்குகிருள் சீதை.

தலைவன், பொருளுக்காகவோ, கல்விக்காகவோ, போரின் காரணமாகவோ தலைவியைப் பிரிதல் உண்டு. தலைவியும் தலைவன் விரைவில் வினை முடித்து வருவான் என்ற நம்பிக்கையுடன் ஆற்றியிருப்பாள். ஆனல் சீதை எந்த நம்பிக்கையில் இராமன் தன்னைத் தேடி, நாடி நிச்சயம் வருவான் என்று ஆற்றியிருக்க முடியும்? மேலும் உற்ருர் உறவினர் யாருமில்லையே அருகில் ஆறுதல் சொல்ல.

இங்ஙனமாக இராமனைப் பிரிந்து, அதுவரை தனிமையைச் சந்தித்திராத கற்பின் செல்வி, பகைவன் புலத்தில் காமுகனும் இராவணன் கடுஞ்சொற்களைத் தாங்கிக்கொண்டு நம்பிக்கையற்ற நிலையில் வாடி வதங்கித் துயரச் செல்வியாக தனித்திருக்கிருள்.

இராமன் பின்னர் இராவணனைக் கொன்று வென்றபின்னர் தீயில் இறங்கித் தன் கற்பை நிரூபிக்குமாறு சீதையைக் கேட்டபோது அவள் மனம் எங்ஙனம் துடித்திருக்கவேண்டும்?

'ஒருவாறு துன்பங்கள் தீர்ந்தன' என்ற எணணத்துடன் அரசப்பதவியேற்ற அவர்களைத் துன்பம் இவ்வளவில் விடுவதாயில்லை. சில திங்களுக்குள், நிறை மாதக் கர்ப்பிணியான சீதையை—தன் காதலம் மனைவியை—தன் நாட்டுச் சாதாரண குடிமகன், ஒருவன் குடிபோதையில் உளறிய வார்த்தை காகக் காகனகத்தில் விட்டு வருமாறு இலக்குவனைத் துன்பத்துடன் அனுப்புகிருன் இராமன். முதலில் கானகத்தைச் சுற்றிப் பார்த்து வர இராமன் அனுப்பினுன் என்ற மகிழ்ச்சியுடன் செல்லும் சீதை, பின்னர் இராமனின் ஆணையைக் கேட்டுத் துடிக்கிருள். தான் செய்யாத குற்றத்திறகு, தண்டனை மீண்டும் மீணடும் தன்னைச் சுற்றுத் தாக்குவதை எணணியெண்ணி அரற்றுகிருள். கருநிறைந்தக் கோலத்துடன் தனியே கடுங்கானகத்தே விடப்படுகிருள். அவள் மனம் அப்பொழுது எவ்வளவு துயருற்றிருக்கவேண்டும்? எண்ணவே நெஞ்சம் பொறுக்கவில்லையே! பொறுமையின் சின்னமான சீதை அதையும் தாங்கிக் கொள்கிருள்.

கானகத்தில் துணைபுரிவாரற்று, ஆறுதல் கூறி அணைப்பாரற்று தாயாகிருள். பின் வால்மீகி முனிவர் துணையால் தன் இரட்டைக் குழந்தைகளாம் லவ-குசர்களை வளர்க்கிருள். தன் அருமைக் குழந்தைகளிடம் அவர்களின் தந்தையைப்பற்றிக் கூற முடியாது தவிக்கிருள். அதன் மூலம் இராமன்மீது தவருன எண்ணம் அவர்கள் மனங்களில் உருவாகிவிடக் கூடாதே என்று மறைக்கிருள். இவ்வாறெல்லாம் இராமனின பிரிவால் மீண்டும் மீண்டும் வாடும் சீதை பின்னர் இராமனைச் சேராமலேயே பூதேவியின் அன்பு அரவணைப்பில் ஆழ்நது விடுகிருள்.

இங்ஙனம் வாழ்க்கையில் இரணடு மூன்று முறை மட்டுமே இன்பம் சிறு மின்னலெனத் தோன்றி மறைய, ஒரு மன்னனுக்கு மகளாகவும், மற்ருெரு மன்னவனுக்கு மனைவியாகவும் விளங்கியபோதிலும், துன்பத்திலேயே வாடி வதங்கித் துடித்துத் துன்பப்பட்டு, மறையும் துயரச்செல்வியின் பொறுமை, தியாகம் இவை ஒப்பற்றவை. தன் வாழ்வின் மூலம் இராவணன் முதலான அரக்கர்கள் அழியவும், பிறன் மனை நோக்கல் தவறு-அழிவு தரவல்லது—என்ற நீதியை வாலி, இராவணன் மூலம் உலகுக்கு உணர்த்தவும், இவ்வுலக மக்களாம் தன் குழந்தைகள் நலமுடன் நன்னெறியில் வாழவும் இவ்வாறெல்லாம் துன்பங்களை ஏற்று வாழுகிருள் சீதைத் திருஅவதாரத்தில் பிராட்டி.

இத்தகு துயரின் செல்வியாக விளங்கும் சீதையை-சிறையிருந்த செல்வியைப்பற்றி பல்வேறு கோணங்களில் இனிவரும் பகுதிகளில் ஆராய்வோம்.

(தொடரும்)

# அறம் வளர்த்தோன் அறிவித்த ஒருமைப்பாடு

உலகம் தோன்றிய நாள் முதல், மக்கள் தங்கள் தொழில் முறையால் பல பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டனர். காலப்போக்கில் அப்பிரிவுகள் வலுப் பெற்று இனவெறியாகத் தழைத்தோங் கலாயின. இறை வழிபாட்டிலும் இத் தன்மைத்தாயது. காலத்தால் கணக் கிடப்படாத இந்து மதத்தில் இறை வழி பாட்டிலும் பல பூசல்கள் ஏற்பட லாயின. இந்து மதம் சீர்கெடும் நிலை யில், பல மகான்கள் தோன்றினார்கள். நாற்புரம் படிகள் உள்ள குளத்தில் எத்துறையில் இறங்கினாலும் பெறுவது நீர் ஒன்றே; கடல்நீர் முறையே ஆவி, மேகம், நீர்த்துளி, நீரோடையாக பெயர் மாற்றம் பெற்றாலும் அது கடல் நீரேதான் என்பன போன்ற பல இந்துமத கருப்பொருளினை விளக்கும் பல உதாரணங்களை மக்களிடையே எடுத்தியம்பினர். மக்கள் தம் இனத் தின் பெருமிதத்தாலோ, வழிபாட்டு முறையினாலோ, பெயருக்காகத் தம் மால் செய்யப்படும் தர்ம கைங்கர்யங் களினாலோ இறைமாட்சி பெற்றவர்க ளாக கருத முடியாது. வேண்டுமானால் இவையாவும் முதற்படிக்கட்டு எனக் கொள்ளலாம். அன்பும் அருளும் கொண்ட ஒருமை மனத்துடன் ஆற்றப் படும் அறச்செயல் ஒன்றினாலேயே இறைவன் நம்மை நெருங்குகிறான். வேடக்குலத்தலைவர் கண்ணப்பர் இறை மாட்சி பெற்றது அன்புள்ளம் கொண்ட அறச் செயலாலல்லவா!

நாட்டினை தம்பிக்கீந்து காடுசென்று கங்கைக்கரை அடைந்த அறம் வளர்ந்த அண்ணல், அக்கரை சேர்ந்ததும் குகனை சகோதரனாக ஏற்றுக்கொண்ட தன்மை எத்தகைத்து? தன் தொழிலாம் பட கோட்டலை செவ்வனே செயலாற்றி யும், தக்கோர்க்கு தன்னால் இயன்ற உதவிகளைச் செய்தும், வேண்டிய காலத்து உணவு படைத்தும் வந்த தாலன்றோ சகோதரனாக ஏற்றுக் கொள்ளப்பட்ட நிலையினைப் பெற்றான் வேட்டுவக் குல விளக்காம் குகப் பெருமான்.

மேற்குறிப்பிட்ட காரணங்களைக் கொண்டு இராமரால் மட்டும் ஏற்றுக் கொள்ளப்பட்டவனில்லை குகன். மூவ ரால், மாறுபட்ட காலங்களில் மன தார ஏற்றுக்கொள்ளப்பட்ட பெரு மையினை பெற்றவன் குகன்.

தன் தாயால் நாடு கடத்தப்பட்ட அண்ணலைப்பின் தொடர்ந்து செல்லும் பரதர் குகனைச் சந்திக்கிறார். தன் தாய் மார்களை குகனுக்கு முறையே அறிமுகப் படுத்துகிறார் பரதர். ''மூவுலகும் ஈன்றானை முன் ஈன்றாள்'' (கோசலை) பாதங்களில் நெடிது வீழ்ந் தழும் குகனை ''கன்று பிரி கராவின் துயருடைய'' கோசலை 'இவன் யார்' என்று பரதரைக் கேட்க, இராமருக் கும் இலட்சுமணனுக்கும், சத்துருக் கனனுக்கும் எனக்கும் மூத்தவன். குகன் என்னும் பெயரினையுடையவன் என்றார்.

''இன்றுணைவன் இராகவர்க்கும் இலக்கு வர்க்கும்
இளையவர்க்கும எனக்கும் மூத்தான்
குன்றனைய திருநெடுந்தோள் குக னெனபான
இனனின்ற குர்சில என்றான்''.

இராமர் சகோதரனாகத்தான் (ஐவரா னோம்) ஏற்றுக்கொண்டார். ஆனால் பரதரோ நால்வரினும் மூத்தவராக ஏற்றுக்கொணடார்.

இராமரால் சகோதரனாகவும், பரத ரால் மூத்தவராகவும் ஏற்றுக்கொள் ளப்பட்ட உடன்பிறவா பிறப்பாம் குகனை, இராமர் பிறப்பால் நிலையான புகழினைப் பெற்ற மணிவயிறும் கோசலைத் தாயார் நன்மை பயக்கும் துன்பத்தினால் நாடுவிட்டு காடுநோக்கி வந்ததும் நன்மையேயாயிற்று. யானை போன்ற பலத்தினையுடைய இலக்கு வனோடு நீங்கள் நால்வரும் சேர்ந்து ஐவரும் ஒருவராக இவ்வுலகில் நெடு நாள் வாழ்வீராக என்று வாழ்த்துரை வழங்கினார்.

'' கைவீரக் களிறனைய காளையிவன்றனை
னோடு கலந்து நீங்கள்
ஐவிரும் ஒருவீராய் அகலிடத்தை
நெடுங்காலம் அளத்தி ரென்றாள்.''

இராவணன், இந்திரஜித் இவர் களால் தோற்கடிக்கப்பட்ட இந்திரன் இறைவன்பால் சரணடைந்தபோது ''உங்கள் இடர்களைய யாம் இராமா வதாரம் எடுப்பதாகவும் அவ்வமையம் நீர் வாலியாகப் பிறந்து, துணை நிற்பா யாக'' என்ற ஆணைக்கேற்ப பிறந்து, வந்த காரியத்தை மறந்து ''உன் உறவு என் உறவு, உன் பகை என் பகை'' என, பகைவனாகிய இராவணனோடே நட்பு பூண்டு ரிஷியமுக பர்வதமனுப் பினன் தம்பி சுக்ரீவனை. தன் நிலையினை யுடைய சுக்ரீவனை இராகவன் கண் டார். அபயம் கொடுத்து ஆறுவது சகோதரனாக ஏற்றுக் கொண்டார். வாலிக்கு தன்னை அறிவித்தார். 'மூவர் நீ, முற்றும் நீ' என இராமனை அறிந்த வாலி-தவறு உணர்ந்து தன் கிளை காக்கும் பொறுப்பையும் தன் அண்ணலிடம் ஒப்புவித்து தன்னையும் அறிந்து (இந்திரன்) வைகுந்தம் சென் றடைந்தான். வானர வீரனையும் ஆறு வது பிறப்பாக ஏற்றுக் கொண்டது ஒருமைப் பாட்டின் உச்சநிலையினை உணர்த்துகிறதல்லவா.

திரு: S. G. பாட்சா, சிவியாந்தாங்கல்.

நிறைந்த இறை பக்தியினுல் பெரும் பதவி பெற்று வாழ்ந்தான் இராவணன். சூர்ப்பணகையின் விருப்பம் நிறைவேருதலால் அவளால் இராவணன் தூண்டிவிடப்பட்டான். காம வெறியஞக மாறினுன். பிறர் மனே கவர்ந்தான. நல்லறம் உணர்ந்த தம்பி வீடணன் தக்க முறையில் நீதியை எடுத்தியம்பினுன். தம்பியை தவருக நினேத்தான். வெறுத்தான்.

''பிறர் பொருளே ஒருவன் களவாடு வானேயானுல் அப்பொருளினே உரியவரிடம் சேர்ப்பித்தல் ஒருவன் கடமை பாகும். அவ்வாறு அவன சேர்க்க மறுப்பானேயானுல் அப்பொருளுககு உரியவரிடம சொல்லி திருமபப் பெறச் செய்வதே அறமாகும்'' என நினேத்த வீடணன் பொருளிற்கு உரிய இராமரிடம் சரண் அடைந்தார். சேற்றிலும் செந்தாமரை வளர்வதை ஒத்த வீடணனுக்கு சரணுகதி கொடுத்தாட் கொண்டதோடு இவர்க்கு முன் தனனுல ஏற்றுக் கொள்ளப்பட்ட சகோதரர்களே முறையே தெரிவித்து 'நினனேடு தசரதனுக்கு ஏழு புதல்வரானேம்' என்பதை எடுத்தியம்பினுர்.

''குகனெடு மைவரானே முன்புபின்
குன்று சூழ்வான
மகனெடு மறுவரானே மெம்முழை
யன்பின வந்த
அகனமர் காதலேய நின்னெடு
எழுவரானேம்
புகலருங் கானந் தந்து புதலவராற்
பொலிந்தானுநதை''

சாதியில் சண்டாளர்கள் என்று கருதப்படுவோர் இறைவனின் அடியார்கள் என்ருல் அவர்களுக்கு நான் அடிமை என்கிருர் நம்மாழ்வார்.

''குலம் தாங்கும சாதிகள் நாலிலும்
கீழிழிந்து எததுனே
நலந்தானிலாத சண்டாள சண்டாளர்
களாகிலும்
வலந்தாங்கு சக்கரத்தண்ணல மணி
வண்ணறகு அருளனறு உள்
கலநதாா அடியார் தம அடியாா
எமமடிகளே''

பசுவினே உரித்துண்ணும் புலேயர்களாயினும் இறைவனுக்கு அன்பராகில் அவரை நான் வணங்கும் கடவுளாக மதிக்கிறேன் என்கிருர் நாவுக்கரசர்.

''அங்கமெலாம் குறைந்தழுகு தொழு
நோயராய
ஆவுரித்துத் தின்றுழலும் புலேய
ரேனும
கங்கைவார் சடை கரந்தாாக்கு அன்ப
ராகில்
அவா கணடீா நாம் வணங்கும்
கடவுளாரே''

சாதி குலம் பிறப்பு என்ற அடிப்படையில் வேற்றுமை காட்டுவது வெள்ளச் சுழிப்பிலே அகப்பட்டு தவிப்பது போலாகும் என்கிருர் மாணிக்கவாசகர்.

''சாதி குலம் பிறப்பெனும் கழிபட்டுத்
தடுமாறும்
ஆதமிலி நாயேனே''
—திருவாசகம்.

இறைமை என்ற அருட் சோதியினே காண வேணடுமானுல் சாதி சமயம என்ற வழக்குகளே விட்டுவிடவேண்டும் என்கிருர் வள்ளலார்.

''சாதி சமயச் சழக்கை விட்டேன்
அருள
சோதியைக் கண்டேனடி''
—அருட்பா.

ஆழ்வார்களாலும் நாயன்மார்களாலும் பலவாறு விளக்கப்பட்டும், தர்மம் குறைந்த காலத்து தோன்றும இராமலிங்க அடிகளார் போன்ற பல தெய்வப் பிறவிகளாலும்,

''ஈஸ்வர் அல்லா தேரே நாம்
சபகோ சன்மதி தே பகவான்''

என்று சுருங்கச் சொல்லி விளங்க வைத்த காந்தி அடிகளார் அவர்களாலும் ஒருமைப்பாட்டின் பெருமை இன்றுவரை எடுத்தியம்பப்படுகின்றது.

இவ் ஒருமைப் பாட்டினேத்தான் நம் அறம் வளர்த்த அண்ணல் இராமபிரான் அவர்கள் தம் அவதாரத்தில் வேடுவா குலம் எனறும், குரங்கினம் என்றும், அசுர குலம் என்றும் வேற றுமைப் பாராது தன் உடன் பிறவா சகோதரர்களாக ஏற்று வாழ்ந்து காட்டினுர்

இவையனேத்தும் அழகுபட இலக்கியமாக அமைத்துத் தந்துள்ளார் கம்பநாட்டாழ்வார். அவற்றை நாம் படிப்பதோடு நில்லாமல் வாழ்க்கையில் கடைபிடித்து நம் நாட்டின் ஒருமைப்பாட்டு உணர்வினே வலுப்பெற செயலாற்றுவோமாக. ✡

அத்யாயனேத்ஸவத்தின்போது பன்னிரு ஆழ்வாாகளின் திருககோலம்.
S. V. K. S. ஸ்ரீநிவாசன்-திருப்பதி.



# ஆலவட்டம் வீசினார்; ஆறுமொழி பேசினார்!

விசிறி என்று நாம் சாதாரண நடைமுறை வழக்கில் கூறும் சொல் ''ஆலவட்டம்'' என்று இலக்கியங்களில் வழங்கப்படுகிறது. இதனோடு ஸம்ப்ரதாயமான 'திரு' என்கிற சொல் சேர்ந்து திருவாலவட்டம் ஆகிறது. திருவிற் பொலிந்த திருமாலுக்கு இத் திருவாலவட்ட கைங்கர்யம் செய்து அவருடன் வார்த்தையாடிய பெருமை திருக்கச்சிநம்பிகளுக்கே உரியது. அவருடைய திவ்ய சரிதத்தை ஈண்டு சிறிது அனுபவிப்போம்.

## மருவாரும் திருமல்லி வாழ வந்தது:

இவர் பெயர் திருக்கச்சி நம்பி என்று வழங்கப்படுகிறதேயொழிய இவர் தாம் அவதரித்தருளினது சென்னையை அடுத்த ''பூவிருந்தவல்லி'' என்கிற திருத்தலமாகும். அங்கு மாசி மாதம் மிருகசீர்ஷ நன்னாளில் அவதாரம் பண்ணினார் நம் நம்பிகள்.

## அருளாளருடன் மொழிசொல் அதிசயித்த வரலாறு:

இவர் முந்துற முன்னம் திருவாலவட்ட கைங்கர்யம் செய்ய எண்ணிச் சென்றவிடம் சேலுகளும் திருவரங்கம். ஆனால் அரங்கத்துறையும் அண்ணல் காவிரி நடுவில் துயில் கொண்டவன் ஆதலால் அவனுக்கு இந்தக் கைங்கர்யம் உவப்பானதாக இல்லை. அங்கிருந்து திருவேங்கடத்துறை செல்வனிடம் வந்தார். அவனோ குளிரருவி வேங்கடத்தான் ஆதலின் பின்பு சிந்தித்து மதிள்கச்சி நகர் உறையும மணிவண்ணனிடம் வந்து சேர்ந்தார். அவன் புகழோங்கு பொன்மலை யென்பதோர் புண்யகோடியுடன் அயன் ஹய வேள்வியில் எரிசுடர் நடுவுள் அவதரித்தவனாகையாலே இவருடைய திருவாலவட்ட கைங்கர்யத்திற்கு சிறந்த பயன் கிடைத்தது. இவர் திருவாலவட்டம் வீசுவதில் மகிழ்ந்து அண்ணல் இவரோடு பேசி அளவளாவினான். காசினியோர்தாம் வாழக் கலியுகத்தே வந்துதித்து ஆசிரியப் பாவதனில அருமறைகள் பேசி மகிழ்ந்தான் அருளாளன்.

## ஆறுமொழி பூதூரார்க்கு அளித்தது:

இங்ஙனமிருக்கையில் ஒரு நாள் பெரும்பூதூர் வந்துதித்த வள்ளல் இராமானுசர் தாமும் நம்பிகளை அணுகி, ''நமக்கு உள்ள சில சந்தேகங்களுக்கு விடை கூறவல்லான அருளாளன் ஒருவனேயன்றி மற்றிலர்; நீரே அவனோடு பேச வல்லவர்; ஆகையால் இச்சந்தேகங்களை அவன் வாயிலாக விளக்கியருள வேண்டும்'' என்று பரார்த்தித்தார். நம்பிகளும் சம்மதித்து அருளாளனிடம் விண்ணப்பம்

ஸ்ரீவத்ஸ. கே. ராஜா B Com., கூரம்.

செய்ய அவன் தானே, (1) அஹமேவ பரம் தத்வம், (2) தர்ஸனம் பேதமேவச, (3) உபாயேஷு ப்ரபத்திஸ்யாத் (4) அந்திமஸ்ம்ருதி வர்ஜனம், (5) தேகாவஸானே முக்திஸ்யாத், (6) பூர்ணாசார்ய ஸமாச்ரய:'' என்னும் ஆறுவார்த்தைகளையருளி இராமானுசரின சந்தேகங்களைத் தெளிவு படுத்தினான். கலக்கம நீஙகப் பெற்ற இராமானுசர் கச்சி நம்பிகளைப் போற்றினர். நம் இராமானுசருடைய ஐந்து ஆசாரியர்களில் ஒருவரானார் நம்பிகள்.

## தேவராஜாஷ்டகம் செப்பியது:

நம்பிகள் தாமும் பேரருளாளன் பால் பெருங்காதல் பூண்டு ஒழிவில் காலமெல்லாம் அவன் திருவடி நிழலிலே இருந்தமை காரணமாக ஞானம் கனிந்து நலமெய்தினர் அவனைப் பற்றின ஸ்தோத்திரமான ''தேவராஜாஷ்டகம்'' என்னும் நூலை இயற்றினர்.

## தென்னரங்கம் ஆளவந்தார் திருவடி போற்றினமை:

அக்காலம் திருவரங்கத்திருப்பதியில் ஸ்ரீ வைஷ்ணவ பீடத்தை அலங்காரம் செயது கொண்டு கோயில் நிர்வாகம் பண்ணி வந்தவர் நாதமுனிகள் வம்சத்தவரான யமுனைத்துறைவர் என்னப் பட்ட ஆளவந்தார் என்பவர். அவர் தமக்கும பிராயம் அதிகமானபடியால் தனக்கடுத்து இந்தப் பீடத்தில் அமரும் தகுதி பெற்றவர் யாவர் என்றெண்ணி மறுகினார். அழகிய மணவாளன அவர் கனவில் தோனறி ''கவலை வேணடாம. பெருமாள கோயிலாம காஞ்சீபுரியில நம் இராமானுசன் என்பான் உளன; நம் தரிசனம தழைத்தோங்க அவனே உமக்குப் பின் இப்பீடத்திற்குத் தக்கவன்'' என்றருளிப் போந்தான். ஆளவந்தாரோ இராமானுசரை முன் கண்டிலர். அவரைக் காணும் அவாவுற்று திவ்யதேச யாத்திரை புறப்பட்டு காஞ்சீபுரம் வந்தடைந்தார். பேரருளாளன் நியமனப்படியே நம்பிகளும் அவரை ஆசரயித்து உசாவி நலம் பேணி கௌரவித்தார். ஆளவந்தார் தாமும ''இவ்வூரில் இராமானுசன் என்பான் யவன? அவனை நமக்குக் காட்டித்தர வேண்டும'' என்றார். நம்பிகள் பெருமாள் கைங்கர்யத்தில் ஈடுபட்டிருந்த இராமானுசரைக் காட்ட ''ஆம் முதல்வனிவன்'' என்றருளி அகமகிழ்ந்தார் ஆளவந்தார். மிகுந்த மனமகிழ்ச்சியோடு நம் தரிசனத்திற்கு ஒரு பெருநிதி கிடைத்தது போன்று திருவரங்கம் திரும்பினர்.

# தங்கு வசதி விவரங்கள்

திருமலையிலுள்ள கீழ்வரும் காட்டேஜுகளுக்கான வாடகை விவரங்கள் 1—12—78 முதல கீழ்க்கண்டவாறு மாறறஞ் செய்யப்பட்டுள்ளன.

| எண | காட்டேஜ் அல்லது அறைத தொகுதியின் பெயர் | இதுவரை வசூலிககப பட்ட தொகை (நாள் ஒன்றிற்கு) | தற்போது வசூலிக்கப் படும்தொகை |
|---|---|---|---|
| | | ரூ. | ரூ. |
| 1. | எச். ஆர். காவியப்பா காட்டேஜ் | 50—00 | 100—00 |
| 2. | நாராயணகிரி காட்டேஜஸ் 1 to 4, 13 to 20 | 25—00 | 40—00 |
| 3. | டி. பி. காட்டேஜ் (உள்ளே) 1 to 8; ஏ to ஜி; III வது வரிசை 1 மற்றும் 16; சிஎமசி; விவிசி-6; எஸ்என்சி; கேவி ஆர; விவிசி-1; விவிசி-8; டிபிசி-10 | 20—00 | 30—00 |
| | (a) மேற்படி காட்டேஜின் A பகுதி | — | 18—00 |
| | (b) ,, ,, B பகுதி | — | 12—00 |
| 4. | டி. பி. காட்டேஜஸ் (வெளியே) விவிசி; எமபிசி; ஏடிசி. | 16—00 | 25—00 |
| | (a) மேற்படி காட்டேஜின் A பகுதி | 9—00 | 15—00 |
| | (b) ,, ,, B ,, | 7—00 | 10—00 |
| 5. | டி.பி.காட்டேஜஸ-IIIவது வரிசையிலுள்ள தனிஅறைகள் | 6—00 | 10—00 |
| 6. | எஸ்.வி.ஜி.எச்-இல் உள்ள பெரிய அறைத் தொகுதிகள் | 25—00 | 35—00 |
| 7. | எஸ் வி.ஜி.எச்-இன் மூலையிலுள்ள அறைத் தொகுதிகள | 20—00 | 25—00 |
| 8. | எஸ் வி.ஜி எச்-இல் உள்ள வேறு அறைத் தொகுதிகள் | 16—00 | 20—00 |

**திருப்பதியில**

| | | கிடைககும அறைகள எண்ணிக்கை | | |
|---|---|---|---|---|
| 1. | தி. தி. தேவஸ்தானம் கஸ்ட் ஹவுஸ்: (இரண்டு படுக்கைகளைக் கொண்ட அறைத்தொகுதி ஒன்றிற்கு) | 18 | ரூ | 16/— |
| 2. | ஸ்ரீநிவாச சத்திரம் (மாடியில்) (மேசை நாற்காலிகளைக் கொண்ட அறைகள)இரண்டு படுக்கைகளைக் கொண்ட அறைத் தொகுதி ஒன்றிற்கு: | 30 | ரூ | 12/— |
| 3. | ஸ்ரீநிவாச சத்திரம் (கீழ்ப்பகுதியில்) (மேசை நாற்காலி வசதிகளைக் கொணடது) நான்கு படுக்கைகளைக் கொண்ட அறைத்தொகுதி ஒன்றிறகு | 40 | ரூ. | 15/— |

**குறிப்பு:** மேசை, நாற்காலி போன்ற வசதிகள் இல்லாத சத்திரங்களில் தங்கும் அறைகள் யாத்திரிகர்களுக்கு இலவசமாக வழங்கப்படும்.

செயலாட்சித் தலைவர்,
தி. தி. தேவஸ்தானம், திருப்பதி.

நம்பிகளும் ஆளவந்தார் திருவடி நினை விலும் அருளாளன் கைங்கர்ய நிழ லிலும் தன எஞ்சிய வாழ் நாட்களைக் கழித்துப் பின் நலமந்தமில்லதோர் நாடு புகுந்தார்.

இவ்வாறாக பூவிருந்தவல்லியில் பிறந்து, திருக்கச்சி மாநகரத்தோடும், அத்தியூர் அருளாளனோடும் தொடர்பு கொண்டு அதனால் திருக்கச்சி நம்பிகள் என்று பிரஸித்தமாய் வழங்கப்பட்ட வர், இராமானுசனை ஆளவந்தார்க் கும் வைஷ்ணவ உலகிற்கும் காட்டித் தந்தவர், பகவத் இராமானுசர்தமக் கும் ஆறுமொழி பெற்றுத் தந்த ஆசார்ய ஸார்வபௌமர் திருக்கச்சி நம்பிகளின் திவ்ய சரிதம் வைணவர் கள ஒவ்வொருவரும ஆழநது அறிநத கொள்ள வேண்டியதொன்றாகும்.

திருக்கச்சிநம்பி இரு திருவடிகள் வாழியவே!

★

---

(16-ம் பக்கத் தொடர்ச்சி)

இதனைக் கேட்ட இராவணன், "முரிந்த வில்லை முறித்தவன்; ஓட்டை மரத்தை மறுபடியும் துளைத்தவன்; ஒரு வேலைக்காரி கூனியின் நுண்ணறிவி னால் அரசையிழந்தவன்; காட்டில் அலைந்து திரிந்து கொண்டிருக்கும் அவன், என் அபார சாமர்த்தியத் தால் மனைவியை இழந்தவன் பலவீனங் களின் இருப்பிடமான அக்கோழையை, உன்னைத் தவிர புகழ்வார் யார்? 'பரம்பொருளே நம்மை கொல்வதற் கென்று மனிதனாக அவதரித்துள்ளார். அவர் மகாவிஷ்ணு; சாவ வியாபி' என கிறாயே, அந்தத் திருமால் என்னிடம் பலமுறை தோற்று ஓடிப்போகவில்லை யா? பித்தனை சிவனும், எத்தனை மாலும் எனக்கே பயந்து ஓடும் பொழுது, அவர்கள் ஏறிச் சென்ற ரிஷபம், கருடன் மேல் ஆகியவற்றின் தைத்த அம்புகள் இன்னும் அவ் வுடம்புகளிலேயே புதைந்து கிடைக கின்றன. இந்தப் பெரிய விசாலமான இடத்தில் நீ தங்கியிரு. போருக்கு வர வேணடாம்" என்று ஏளனச் சிரிப்பு சிரித்தான் இராவணன.

இதைக்கேட்ட விபீடணன் அதிர்ச் சியடைந்து பின்னும் அவனை நோக்கி "ஐயனே! தங்களைவிட பன்மடங்கு பல சாலிகளான நம் முன்னோர்கள் பலர் இத்திருமாலை எதிர்த்து மாண்டார் கள். அவர்களுள் இரணிய கசிபுவை- பற்றி கேள்விப் படவில்லையா. வேதங் களையெல்லாம் பிரம்மதேவனால் கறபிக்கபபட்டவன். அவன் பெற்றி ருந்த வரங்களோ அளவில. காத்தற் கடவுளாகிய திருமாலின் பெயரை யாரும் மறந்துகூடச்சொலலக்கூடாது, தானே தடவுள் என்றும், மும்மூர்த்தி களும் தன் பெயரையே உச்சரிக்க வேண்டுமென்றும் ஆணையிட்டான். வேதங்கள் கூட அவன் பெயரைத் தான் சொல்லவேண்டும். அவிர் பாகங்களுக்கெல்லாம் உரியவன் அவனே. ஆனால் அவன் திருக்குமா ரனோ விரும்பிய புருஷார்த்தங்களை வாரி வழஙகுவது,அழிவில்லா வைகுண் டத்தை அடையச செய்வது, "நமோ நாராயணா" எனும் மந்திரமே எனறு கூறிககொணடே வந்தான்.

அஷ்டாகாரத்தின் மகிமை இரணிய னுக்குப் புரியவில்லை. பிறகு உக்கிரக நரசிம்மஸ்வரூபம், இராணியனின் இரண்டு கால்களைப்பற்றி, அந்திமாலை நேரத்தில், தலைவாயிற்படியின்மேல் தன் தொடைமீது வைத்துக் கொண்டு அவன் மார்பை பிளந்து அவன் உயி ரைப் போக்கி தேவர்களின் துயரைத் துடைத்தது. இதுதான் முன்பு நடந்த வரலாறு" என்று கூறி முடித்தார்.

அதற்கு இராவணன், "நீ நன்கு சொன்னாய்! இரணியனின் மகன், தந்தைக்கு உலை வைத்து இராஜ்ஜியத்தைக் கைப் பற்றினான். நீயும், நான் தோல்வியுற்றால் என் இராஜ்ஜியத்தை ஆளப் பார்க்கிறாய். அன்றைக்கு, ஒரு குரங்கு வந்து சோலையை அழித்தபோது அதைக் கொன்று தின்னுங்கள் என்று கூற, நீ இடைமறித்து தூதரைக் கொல்லக்கூடாது என்று தடுத்துவிட்டு அவனைச் சரண் புகவும் துணிந்துவிட்டாய். பழிக்கு அஞ்சி உன்னைக் கொல்லாது விடுகிறேன்,'' என்று கர்ஜித்தான்.

உடனே விபீடணன், அவன் மந்திரிகளான அனலன், அனிலன், அரன், சம்பாதி என்ற நால்வருடன் மேலே வானிற் கிளம்ப, இராகவன் கடற்கரையில் வந்து அமர்ந்துள்ளார் என்று அறிந்து, அந்த இரவு நேரத்தில், மற்ற ஓரிடத்தில் தங்கி, காலையில் "கொற்றவா சரண'' என்ற சொல்லைச் சொல்லிக்கொண்டு, வானர சேனைகளின் பக்கம் போய்ச் சேர்ந்தான். அங்குள்ள வானரங்கள் 'நீவீர் யார்' என்று வினவ, அயன் என்பவன், 'இவர் பிரம்ம தேவருக்குப் பேரன்: தர்மநெறி தவறாமை, மால்பக்தி, வாய்மை, பிராமண விசுவாசம் ஆகியவைகளை தன் தவத்தின் பயனாய் பிரமனிடமிருந்து வரமாகப் பெற்றவர். 'சுடுதியைத் துகிலிடைப் பொதிந்த துன்மதி, இடுதியே சிறையிடையிறைவன் தேவியை, விடுதியே லுய்குதி விடாது வேட்டியேல்' என்று, நெருப்பை மடியில் கட்டிக் கொண்டது போல், சீதா தேவியை சிறை வைத்திருக்கிறாயே. உடனே இராமபிரானிடம் கொண்டு போய் விட்டுவிட்டு மன்னிப்புக்கேட்டுக்கொள். இன்றேல், குலத்தோடு நாசமாவாய்' என்று பல புத்திமதிகளைக் கூறினார். இலங்கேச்வரன் செவியில் இது எல்லாம் விபரீதமாக விழுந்ததால், இங்கே தங்களிடம் அடைக்கலமாக வந்துள்ளார்'' என்றுகூறி முடித்தான்.

இராகவனோ, அங்குள்ள முக்கியஸ்தர்களை நோக்கி, விபீடணனைச் சேர்த்துக் கொள்வதா, துறப்பதா என்று கூறுங்கள் என்று வினவ, சுக்ரீவன், ஜாம்பவன், நீலன், மற்றுள்ளோர் யாவரும் ஏற்றுக் கொள்ளுதல் தகாது என்றனர். இராகவன், அனுமனைக் கேட்க, அதற்கு அவர், தான் தூது சென்ற காலத்தில், இராவணன் தன்னைக் கொல்லச் சொல்ல, அதற்கு இவர் 'தூதரைக் கொல்லுதல் அறமன்று; போரில் வெற்றி கிடைக்காது' என்று எடுத்துரைத்தார். நான் இலங்கையில் இவர் மாளிகையில் சென்ற போது சீலம் பொருந்திய அந்தணன் வீடு போலிருந்தது. இவருடைய மகளோ திரிஜடை என்பவள், இராவணன் பிறர் மாதரைத் தீண்டினால் தலை சிதறி மாய்வான் என்ற சாபமிருக்கிறது என்று கூறி தைரியமூட்டி, சீதாப் பிராட்டியைத் தேற்றி வைத்துக் கொண்டிருந்தாள். இவர் வரவு நல்வரவு என்பது எனது திடமான நம்பிக்கை.'' என்று கூறினான். இதைக் கேட்ட இராமன், 'சரணளிக்குயார்' என்று ஜானகி அலறியக் காலத்தில், என் தந்தை ஜடாயு வந்து இராவணனிடம் போர் செய்து தன் உயிரையே இழந்த தனமை, என்பால் இருக்க வேண்டாமா என்று கூறி விட்டு விபீடணனை அழைத்து வரச் செய்தார்.

விபீடணன் தன்மையைக் கண்டு, இராகவன், 'தசரதச் சக்கரவர்ததிக்கு நாங்கள் நால்வர் புதல்வராகப் பிறந்தோம். குகனோடு ஐவரானோம். சுக்ரீவனோடு அறுவரானோம் இப்பொழுது உன்னுடன் எழுவரானோம்' என்று கூறினார். யாருக்கும் எட்டாத இந்நிலை சரணாகதி தத்துவத்தின் மூலம் விபீடணனுக்குக்கிட்டியது. இராவணவதமே இராமகதையின் உட்பொருள். சூர்ப்பணகையின் சூழ்ச்சியே ஒரு ஆவேச நிகழ்ச்சி. சீதையைக் கவர்ந்ததுதான் ஒருசிக்கலின் திருப்புமையம். இதற்குத் தீர்வு காணும் விதம், சரணாகதித் தத்துவத்தின் அடிப்படையில் தான் ஆரம்பமாகிறது.

சூரியன், தன் வம்சத்தில் தோன்றிய இராமனின் அறவுரைகளைக் கேட்டு இனியும் தம் உஷ்ணமான கிரணங்களால் துன்புறுத்தக் கூடாது என்று மேற்றிசைக் கடலில் மறைந்தான்.

முற்றும்.

தொடர் கட்டுரை :




# கீதை காட்டும் நல்வழி

## அத்தியாயம்–10

## விபூதி யோகம்: பகுதி – 9

**த**ர்க்க பூர்வமாக அறிவைப் பெறுவது மூவகைப்படும். வாதம், ஜல்பம், விதண்டை என்பவையே அந்த மூன்று பிரிவுகள். உண்மையைத் தெரிநது கொள்ள வேண்டும் என்ற நோக்கத்துடன் விருப்பு வெறுப்பு இன்றி முறையாகப் பேசுவது வாதம் ஆகிறது. வாதத்தில் எந்தப் பிரிவினர் வெற்றி அடைகின்றனர், எந்தப் பிரிவினர் தோல்வி அடைகின்றனர் என்பதைப் பற்றிய பிரச்சினையே எழாது. மென்மேலும் கேள்விகளைக் கேட்டு பகுத்தறிவு பூர்வமாக தர்க்க அடிப்படையுல் அறிவைப் பெறுவது வாதம் செய்வதன் நோக்கம். ஜல்பம் என்பது வாதத்திலிருந்து வேறுபடுகிறது. அதில் ஒவ்வொருவனும் தன் கொள்கையையே நிலைநாட்டப் பார்ப்பான். சாஸ்திரப் பிரமாணம், பேச்சுத் திறமை, தந்திரம், யுக்தி முதலியவற்றைக் கையாண்டு எப்படியாவது மற்றவனை வாயடக்கி விட வேண்டும் என்பதுவே ஜல்பத்தின் குறிக்கோளாகும். விதண்டம் என்னும் பிரிவில் ஒருவன் தன் கொள்கையை ஸ்தாபிப்பதுமில்லை, பிறர் கொள்கையை ஏற்றுக் கொள்ளுவதுமில்லை. எதிர்த்தரப்பினரையும் அவர்களது கொள்கையையும் ஏளனம் செய்வதொன்றே அவனது இலக்ஷியமாக அமைகிறது. அத்தகையோருடன் பேசி எவ்விதப் பயனும் ஏற்படாது என்பது மட்டு

திரு. டி. கே நாராயணன், M.Sc.,
ஆசிரியர் ''சமய ஜோதி'' மதுரை.

மல்ல, அத்தகைய விதண்டாவாதத்தினுல் வீண் மனக்கிலேசமும், சண்டையும்தான் ஏற்படும். எனவே நாம் இத்தகையோரை எவ்விதத்திலும் தவிர்க்க வேண்டும்.

இந்த வாதம், ஜல்பம், விதண்டை ஆகிய மூன்றில் உண்மையைப் பற்றிய ஆரய்ச்சிக்கு வாதம் ஒன்றே பயன்படுவதால் தர்க்கத்தில் தாம் வாதமாக இருப்பதாகப் பகவான் மொழிகிருர். பாரதத்தில் அறிஞர்களுக்கிடையே தொன்று தொட்டு அறிவுப் பெருக்கத்திற்கு இத்தகைய வாதப் பிரதி வாத முறை கையாளப்பட்டு வந்திருக்கிறது. ஸ்ரீ ஆதி சங்கர-மண்டன மிஸ்ர சம்வாதம் இதற்கு ஒரு எடுத்துக் காட்டாகும். நாட்கணக்காக நடந்த அந்த விவாதத்தில் இறுதியில் கர்ம காண்டத்தை நிலை நிறுத்த விரும்பிய மண்டன மிஸ்ரர் அத்வைத ஞானியான ஸ்ரீ ஆதி சங்கரரிடம் தோல்வியுற்று, இல்லறத்தை விடுத்து துறவறத்தை மேற்கொண்டு சன்னியாசி ஆகி ஸ்ரீ ஸுரேஸ்வராச்சாரியார் என்ற பெயருடன் ஸ்ரீ சங்கரரால் ஸ்தாபிக்கப் பட்ட முதல் மடமான சிருங்கேரி சங்கர மடத்தின் முதல் ஆச்சாரியராக ஆனுர் என்று சரித்திரம் கூறுகிறது. பிருஹதாரண்யக உபநிடத்தில் வரும் யாக்ஞவல்க்ய மைத்ரேயி சம்வாதமும் அறிஞரிடையே பிரசித்தி பெற்றதாகும். இக்காலத்தில் நடைபெறும் பட்டி மன்றம் மற்றும் வழக்காடு மன்றங்கள் ஏறக்குறைய இந்த வாத முறையிலமைந்த தர்க்க பூர்வமான ஆராய்ச்சியை ஒட்டியவையே யாகும்.

அக்ஷராணுமகா ரோ஽ஸ்மி
த்வந்த்வ: ஸாமாஸிகஸ்ய ச |
அஹமேவாக்ஷய: கால:
தாதா஽ஹம் விச்வதோமுக: ||

'எழுத்துக்களுள் நான் அகரம். ஸமாஸம் அல்லது கூட்டுச் சொற்களுள் நான் இரு சொற்கூட்டு. முடிவற்ற காலம் நானே. எண்ணற்ற உருவங்களுடன் கூடியவனுக வினைப்பலனை அளிப்பவனும் நானே:'

ஸம்ஸ்கிருத அரிச்சுவடியில் முதல் எழுத்து 'அ'; கடைசி எழுத்து 'க்ஷ'. 'அ'வும் 'க்ஷ'வும் சேர்ந்து அக்ஷரம் ஆகிறது. அக்ஷரம் என்ற வார்த்தைக்கு அழிவற்றது என்றும் பொருள் உண்டு. எழுத்து என்பது அதன் மற்ருெரு பொருள். ஆகவே எழுத்து அழிவற்றது என்பதாகிறது. எழுத்துக்கு மூலம் ஒலியாகும். 'ஒலியே பிரம்மம்' (நாதப் பிரம்மம்) என்கின்றன மறை நூல்கள்; நாதப் பிரம்மம்

அகரத்தில் துவங்குகிறது. ஒலியின் துவக்கமே 'அ' தான். குழநதை எழுப்பும் முதல் ஒலி 'அம்மா' என் பதே. கன்று பசுவைக் கூப்பிடுவது 'அம்மா' எனற ஒலியாலே தான். அம்மாவின் முதலெழுதது 'அ'. 'ஓம்' காரத்தின் முதல் ஒலியும் 'அ' தான். (அ+உ+ம்=ஓம்). இந்த அகரமே வெவ்வேறு விதங்களாகப் பரிணமித்து மற்ற எழுத்துக்களாகின்றது. அதனுல் தான் வள்ளுவரும 'அகர முதல எழுத் தெல்லாம்' என்று திருக்குறளின் முதல் பாட்டில் குறிப்பிடுகிருர்.

பகவான் தமது கீதை போதனேயை இரண்டாம் அத்தியாயத்தின் பதினென் ரும் சுலோகத்தில் 'அசோச்யான் அன்வசோ - சஸ்த்வம்' என்று 'அ' காரத்தில் ஆரம்பித்து, கடைசியில் 18-ம் அத்தியாயத்தின் இறுதியில் 'த்ருவா நீதிர் மதிர் மம' என்று அகாரத்திலேயே முடிக்கின்ருர்.



பவித்ரோற்சவம்—திருமலே.

தனிச் சொற்கள் சேர்ந்து கூட்டுச் சொற்கள் ஆகின்றன. இந்தச் சொற் சேர்க்கையை சம்ஸ்கிருதத்தில் 'ஸமா ஸம்' என்கிருேம். இந்த ஸமாஸம் முக்கியமாக அறு வகைப்படும். அவை முறையே தத்புருஷ ஸமாஸம், கர்ம தாரய ஸமாஸம், பஹுவ்ரீஹி ஸமா ஸம், த்விகு ஸமாஸம், த்வந்த்வ ஸமா ஸம், அவ்யயீபாவ ஸமாஸம் என அறு வகைப்படும். இந்த ஒவ்வொன்றிலும் பல உட்பிரிவுகள உள்ளன. இவ்வறு வகையில் த்வந்த்வ ஸமாஸம் தனிச் சிறப்பு வாய்ந்தது. இரணடு சொற் கள் சேர்ந்து கூட்டுச் சொல் ஆன பிறகு இரண்டுமே சம அந்தஸ்து வகிப் பது எதுவோ அது த்வந்த்வ ஸமாஸம் எனப்படும். சில உதாரணங்கள் கீழே தரப்படுகின்றன.

சூர்யன்+சந்திரன் =சூர்ய சந்திரன்
ராமன்+கிருஷ்ணன் =ராமகிருஷ்ணன்

இரண்டிற்கு மேற்பட்ட பல சொற் களும் சேர்ந்த கூட்டுச் சொல் அமைய லாம். அதுவும் த்வந்த்வ ஸமாஸமே. உதாரணம்:

தர்மம்+அர்த்தம்+காமம்+மோக்ஷம்
=தர்மார்த்த காமமோக்ஷம்

நான்கு வெவ்வேறு சொற்கள் சேர்ந்து ஒன்றுனுலும் அவை சேர்ந்து கூட்டுச் சொல்லாக ஆன பிறகு அவை சம அந்தஸ்து வகிக்கின்றன. ஆன்மீக ரீதியில் இதற்கு நாம் மற்றெரு விளக் கம் கொடுக்கலாம். ஜீவன் தன்னே அறியாமையின் காரணமாகப் பிரம்மத் திலிருந்து வேருகக் கருதுகிருன். குரு வின் அருளாலும் இடைவிடாத சாதனேயினுலும் அறியாமை நீங்கி 'தானே பிரம்மம்' என்பதாக உணர் கிருன். அறியாமை அகனற நிலேயில் 'ஜீவோ ப்ரம்மைவ நாபர.' என்ற வாக்கியத்திற்கேற்ப ஜீவனும் பிரம்ம மும் ஒன்றே, வேறல்ல என்ற சம அந் தஸது நிலேயை அடைகின்றன. இரண் டாக அதுவரை அவன் அறியாமை யால் கருதியது அறிவு வரப் பெறுகை யில் ஒன்ருகி விடுகிறது இந்த உயர்ந்த தத்துவத்தை மறைமுகமாக த்வந்த்வ ஸமாஸம் குறிப்பதாக நாம் கொள்ளலாம்.

காலம் அளக்க முடியாதது. ஏனெ னில் அது அளவு கடந்தது. அதற்கு முதலும் கிடையாது, முடிவும் கிடை யாது. எனவே அது அழிவற்றது. ஆனுல் அளக்க முடியாத காலத்தை நாம் கடிகாரத்தின் துணே கொண்டு அளக்க முற்படுகிருேம். விஞடி, மணி, வாரம், மாதம், வருடம், யுகம் என்ற நமது கணக்குப்படிப் பார்க்குமிடத்து காலத்துக்குத் தோற்றமும் மறைவும் உணடு. ஆனுல் அதற்கு முனனரும் பின்னரும் காலத்தை அளந்து கொண்டு போனுல் அது அளக்க முடியாதபடி கற்பனேக் கடங்காது அகணடா காரத் தில் விரிநதோடுகிறது. அது மட்டு மல்ல. கொஞ்சம் ஆழ்ந்து சிந்தித்துப் பார்த்தால் காலத்திற்குப் பொருளே இல்லாது போய் விடுகிறது. நாம வெகுவாக எதிர்பார்த்துக கொண டிருக்கும் ஒரு நபர் வருவதற்குத் தாமதிக்கையில் விஞடி நேரம் மணிக் கணக்காகவும், மாதக் கணக்காகவும், ஏன் வருடக்கணக்காகவும கூட நமக் குத் தென்படுகிறது. அதே சமயததில் நாம் மிக நேசிக்கும் ஒரு இடததிலோ அல்லது ஒரு நபருடனே இருக்கையில் மணிகளும் விஞடிகளாகத் தென்படு கின்றன. எல்லாம் நமது மனநிலே அல்லது கற்பனே தான். உண்மையில் காலம் கணக்கிட முடியாது, அழி வற்றது என்பதால் அது பகவத்

சொரூபம் ஆகிறது. எனவே தான் இறைவன் மஹாகாலன் எனவும், இறைவி மஹாகாளீ எனவும் அழைக்கப்படுகிறார்கள். (மஹாகாலன் என்ற பெயருடன் உஜ்ஜயினியில் இருக்கும் ஆலயம் மிகவும் புகழ் பெற்றது.)

இறைவன் ஒருவனே. அவனே பல கோடி உருவங்களாகத் தன்னைத் தோற்றுவித்துக் கொள்கிறான். அண்டம், பிண்டம், அசரம், சரம் ஆகிய அனைத்தும் இறைவனது சொரூபமே. ஒவ்வொரு வடிவத்தின் மூலம் அவன் ஒவ்வொரு விதக் கர்ம பலனை அனுபவிக்கிறான். அனைத்தும் அவனே எனில் இறைவனுக்கு முகம் எது? அனைத்தும் அவனது முகங்களே. இறைவன் இல்லாத இடமில்லை. அவன் இல்லாத பொருளில்லை. இயற்கை எங்கும் நிறைந்திருந்து நாம் செய்யும் பல்வேறு செயல்களின் பலனை வழங்குபவனும், அதை அனுபவிப்பவனும் அடிப்படையில் அவனேயன்றி வேறில்லை.

'அனைத்தையும் அழிக்கும் மரணம் நான். செல்வர்களின் செல்வம் நான். பெண்மைகளுள் நான் புகழ், திரு, சொல், நினைவு, அறிவு, திண்மை, பொறையாக இருக்கிறேன்.' (34)

தோன்றிய உயிர்கள் அனைத்துமே மரணத்தைக் கண்டு பயப்படுகின்றன. நம்மில் பலருக்கு மரணம் என்ற சொல்லே பிடிப்பதில்லை. மரணம் என்ற வார்த்தையைக் கேட்டாலே பலரது உடலில் நடுக்கம் ஏற்படுகிறது. மரணத்தை நாம் ஒரு துர்நிகழ்ச்சியாகவும், 'மரணம்' என்ற சொல்லை ஒரு அவச் சொல்லாகவும் கருதுகிறோம். இது நமது அறியாமையிலிருந்து விளைவதாகும். பிறப்பு எவ்வளவு முக்கியமோ அவ்வளவு இறப்பும் முக்கியம். குழந்தை ஒன்று பிறந்தவுடன் மகிழ்ச்சியடையும் நாம், ஒருவர் இறக்கும்போது மகிழ்ச்சியடையாவிட்டாலும், குறைந்த பட்சம் துக்கப்படாமலாவது இருக்க நம்மைப் பயிற்றுவித்துக் கொள்ள வேண்டும். பிறப்பைப் போல மரணமும் ஒரு இயற்கை நிகழ்ச்சியே. அது யாராலும் தவிர்க்க முடியாதது. இந்த உண்மையைத் தெரிந்து கொண்டால் நம்மை சதா வாட்டி வதைக்கும் பெரும்பாலான துன்பங்களிலிருந்து நாம் விடுபட்டவர்கள் ஆவோம். மரணத்திற்கு அஞ்சாதவன் வேறு எதைக் கண்டும் அஞ்சமாட்டான். அது மட்டுமல்ல. ''மரணமோ தவிர்க்க முடியாதது. அது எப்பொழுது வேண்டுமானாலும் வந்து என்னை ஆட்கொள்ளட்டும். அதற்காக நான் இப்பொழுதே வீணுகப் பயந்து என்ன பயன்? இறைவன் எனக்குத் தந்திருக்கும இந்த வாழ்வை அவனது சேவையில் மகிழ்வுடன் நன்கு பயன்படுத்துவேன்'', என்ற எண்ணத்தில் நிலை பெற்று ஒருவன் செயல்படுவானாகில் அவனது வாழ்வில் அமைதியும், ஆனந்தமும், ஆரோக்கியமும் நிச்சயம் நிலவும். மரணத்தைக் கண்டு அஞ்சாதவனைக் கண்டு மரணம் அஞ்சுகிறது என்பர் பெரியோர். மார்க்கண்டேயனது சரித்திரம் இதற்கு எடுத்துக் காட்டு.

அண்ட பகிரண்டங்களைத் தோற்றுவித்தல், அவற்றைத் துடைத்துத் தள்ளுதல் இவையாவும் இறைவனது திருவிளையாடலாகும். இதையெல்லாம் அவன் ஏன் செய்கிறான், ஏன் செய்ய வேண்டும் என்று கேட்க நமக்கு உரிமையில்லை. அப்படிக் கேள்விகளைக் கேட்டாலும் நமது சிற்றறிவுக்கு உரிய பதில் கிட்டாது. படைப்பும் ஈசன் செயல், சம்ஹாரமும் அவன் செயலே. இயற்கை ஒழுங்காக நிகழ படைப்பும், துடைப்பும் சம அளவில் நிகழ்ந்தாக வேண்டும். இதை நாம் நன்கு அறிந்து கொள்ள வேண்டும். மரண பயமே

## ஓர் அறிவிப்பு

கி. பி. 15-ஆம் நூற்றாண்டைச் சார்ந்தத் தெலுங்கு இசைக் கவிஞரும், அவ்வேழு மலைகளில் நின்றவண்ணம் கோலம் கொண்டிருக்கும் வேங்கடவனின் சிறந்த பக்தருமான ஸ்ரீ தாள்ளபாக்க அன்னமாச்சார்யார் அவ்நெடியோன் மீது பக்திச் சுவையும் காதற்சுவையும் மிக்குஒளிர 32,000 கீர்த்தனைகளை இயற்றியுள்ளார். அன்னாரின் அச்சீர்மைமிகு கீர்த்தனைகளின் புகழ் எங்கும் பரவும் வகையில் அக்கவிஞரின் நினைவாக, திருப்பதியில் ரூ 4.5 இலட்சம் செலவில் 'ஸ்ரீ அன்னமாச்சார்யா கலாமந்திரம்' ஒன்று கட்டப்பட்டுள்ளது. தற்போது அக்கலா மந்திரத்தில், சமயப்பற்றும் ஆனமீகப்பற்றும் எங்கும் தழைத்தோங்கும் வகையில் நூலகம் ஒன்று திறக்கப்பட்டுள்ளது. இந்நூலகத்திறகு இந்து சமயம், புராணம் மற்றும் இந்தியக் கலாசாரம் சம்பந்தப்பட்ட பத்திரிகைகள், நூல்கள் பக்தர்களிடமிருந்து இலவசமாக வரவேற்கப்படுகின்றன. மக்கள் சேவையே மகேசன் சேவையாகக் கொண்டு, இப்புனித சேவையில் பங்கேற்று அவ்வெல்லாம் வல்ல அலர்மேல் மங்கை உறைமார்பனின் அருளைப்பெறுவீர்களாகுக!

செயலாட்சித் தலைவர்,
தி. தி. தேவஸ்தானம், திருப்பதி.




# ஸ்ரீ வேங்கடேஸ்வர சுவாமி கோயில்

மற்றும்

# ஸ்ரீ சந்திரமௌளீஸ்வர சுவாமி கோயில்

## தி. தி. தேவஸ்தானம் ஆந்திர ஆஷ்ரமம், ரிஷிகேஷ் உ.பி.

### ஆர்ஜித அட்டவணை

| பொது | | ஸ்ரீ வேங்கடேஸ்வர சுவாமி கோயில் | ஸ்ரீ சந்திரமௌளீஸ்வர சுவாமி கோயில் |
|---|---|---|---|
| | | ரூ. | ரூ. |
| அர்ச்சனை | டிக்கெட் ஒன்று | 2-00 | 1-00 |
| ஹாரத்தி | ,, | 0-50 | 0-50 |
| சகஸ்ரநாம அர்ச்சனை | ,, | 5-50 | 5-00 |
| தோமாலந்தார தரிசனம் | | 5-00 | — |
| தேங்காய் வர்த்தனு (உடைப்பது) | டிக்கெட் ஒன்று | 0-25 | 0-25 |

| | | ஸ்ரீ ராஜலக்ஷ்மி அம்மையார் கோயில் | ஸ்ரீ பார்வதி அம்மையார் கோயில் |
|---|---|---|---|
| அர்ச்சனை | ,, | 1-00 | 1-00 |
| ஹாரத்தி | ,, | 0-50 | 0-50 |
| தேங்காய் வர்த்தனு (உடைப்பது) | டிக்கெட் ஒன்று | 0-25 | 0-25 |

| நைவேத்தியங்கள | | ரூ. |
|---|---|---|
| தத்யோதனம் | முழுத் தளிகை | 45-00 |
| புளியோதரை | ,, | 45-00 |
| பொங்கல் | ,, | 60-00 |
| இனிப்புப் பொங்கல் | ,, | 65-00 |

குறிப்பு : ஒவ்வொரு நைவேத்தியத்திற்கும், ஆர்ஜித கட்டணத்தைத் தவிர மேற்கொண்டு சிங்கமொருவுக்காக ரூ. 3/- செலுத்த வேண்டும். மேலும் அரைக்கட்டண விகிதத்தில், இறைவனுக்கு அரைத்தளிகை நைவேத்தியமும் பக்தர்கள் செய்விக்கலாம்.

அனைத்திலும் பயங்கரமானது, அதை எந்த வகையிலாவது ஒருவன் வென்றாக வேண்டும். மரணத்தைப் பற்றிய உண்மையை ஒருவன் நன்கு அறிந்து அதைப் பற்றிய பயத்திலிருந்து முற்றிலும் விடுபட வேண்டும் என்ற அடிப்படையில் தான் பகவான் எடுத்த எடுப்பிலேயே இரண்டாம் அத்தியாயத்தில் தமது போதனையை மரண பயத்தை வெல்லுதலைப் பற்றிய விஷயத்தில் ஆரம்பித்தார். பிறப்பையும் இறப்பையும் சமமாகக் கருத வல்லவரே இறைவனை உள்ளபடி உணர வல்லவர் ஆகின்றனர்.

'பொருளில்லார்க்கு இவ்வுலகம் இல்லை', என்றார் வள்ளுவர். எவ்வாறு அவ்வுலகிற்கு அருள் தேவையோ அது போல இவ்வுலக வாழ்விற்குப் பொருள் தேவை. பொருள் சேருதலும் இறைவனது அனுக்கிரகத்தாலேயே நிகழ்கிறது. செல்வந்தர்களிடம் செல்வம் சேருவது அவர்களது திறமையினால் மட்டுமல்ல. எவ்வளவு தான் நமது முயற்சியிருப்பினும், இறையருளும் சேர்ந்தாலன்றி பொருள் நம்மை வந்தடைவதில்லை. இறையருள நம கண்ணுக்குத் தென்படாது செயலாற்றுவதால் அதை நாம் 'அதிருஷ்டம்' (கட்புலனாகாதது) என்கிறோம். எனவே செல்வந்தர்கள் தம்மிடம இருக்கும் செல்வத்தால் இறுமாப்பு அடையலாகாது. 'இறைவன் தந்தது இச செல்வம்' என்ற பாவனையுடன தங்களிடமிருப்பதைப் பொருளிலலாது வருந்தும் ஏழை எளியவர்களுடன் பகிர்நது கொள்ள வேண்டும். 'இறைவன் தந்திருக்கும் இச்செல்வத்திற்கு நான் வெறும் காப்பாளன் மாத்திரமே' என்ற பாவனையுடன் நாம் உலகில் வாழ்ந்து தான தருமங்களில் பொருளைப் பயன்படுத்த வேண்டும். இதைத் தான் அண்ணல் காந்திஜியின் தர்மகர்த்தா தத்துவமும் நமக்குப் புகட்டுகிறது.

(தொடரும்)

# ஒருவன்

சிற்றன்னையாகிய கைகேயியின் சொல்லைக் கேட்டுக் காடு சென்றான் இராமன். தான் காடு சென்றால் தசரதன் நிச்சயமாக உயிர் வாழமாட்டான என்பதை அறிந்திருந்தும் இராமன காடு சென்றான். இதனையும், கோதாவரி நதித் தீரத்தில் பஞ்சவடியில் சூர்ப்பணகையுடன் சிறிது நேரம் அவன் நகைச் சுவையுடன் பேசியதையும், பொன்மானைப்பற்றி நன்றாக அறிந்திருந்தும் அவன் அதன்பின் சென்றதனையும், வாலியை மறைந்து நின்று கொன்றதனையும், சீதை கற்பு மாறாதவள என்று நனகு அறிந்திருந்தும், அரககர், வானவர் ஆகியோருக்கு முன்னிலையில், அவளை,

'' ஊண்திறம உவந்தனை; ஒழுக்கம
பாழ்பட மாண்டிலை''

என்று கடுமையாகப் பேசியதையும் காப்பியத் திறனாய் வாளர்கள பலர் இராமன செய்த தவறுகளாகக் கூறுவர்.

'' வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன
வானுறையும்
தெயவத்துள வைக்கப படும்''

என்ற வள்ளுவர் குறளுக்கேற்ப, இராமன மனிதனாக இருந்தே கடவுள் தன்மை அடைநதான் எனபதை விளக்கவே, காப்பிய நாயகனை வால் மீகியும், கம்பரும அவ்வாறு காட்டினர் போலும.

வேந்தர் குலத்தையே வேரறுத்து வந்த பரசுராமனை இராமன் வென்ற காட்சியைத் தனது கண்களால் கணட பிறகுமகூட, இராமனை, தனது ''வெறும் மகன்'' என்றே தசரதன் கருதினான். இத்தனைக்கும் தசரதன் ஒரு பெரும ஞானி

வேடன் குகனோ, இராமனை, ''அஞ்சன வண்ணன் என் ஆருயிர் நாயகன்'' என்று குறிப்பிடுகிறான். இலக்குவனைப் பற்றிக் கூற வேணடியதில்லை. சீதையோ, இராமனை,'' சுருதி நாயகன'' எனறு குறிப்பிடுகிறாள். பரதனோ, இறுதி வரை எல்லாம இராமனே என்று கருதி வந்தான.

முதன் முதலில இராமபிரானின தூதுவனாக இலங்கைச் சென்று சீதையைக் கணடு கணையாழியைக் கொடுத்து விட்டு, அசோக வனத்தை அழித்து விட்டு, மேகநாதனாகிய இந்திரஜித்துவின் 'பிரமமககணை' நிமித்தம் கட்டுணடு இராவணன் முன்பு நிறுத்தப் படுகிறான் அனுமன். அப்போது தனது தலைவனாகிய இராமனை இலங்கை வேநதனுக்கு அனுமன அறிமுகம செய்கையில்,

---

புலவர். பா. அன்பரசு, எம.ஏ.,
மாட்லாமபட்டி.

---

'சூலத்தை ஏந்திய சிவபெருமானும், சங்கு சக்கரத்தைத தாங்கிய திருமாலும, கரசத்தைப பிடித்த பிரமனும ஒருருவம்கொண்டு, ஆதியந்தம இலலாத காரணப் பொருள் மனித வடிவம் கொணடு, கைவில்லேந்தி அயோத்திககு வந்துள்ளான்' என பதை அறிவிக்க,

'' மூலமும நடுவும் ஈறும் இலலதோர்
மும்மைத்தாய
காலமும கணககும நீத்த காரனை
கைவில் லேநதிச
சூலமும் திகிரி சங்கும கரகமும
துறந்து தொல்லை
ஆலமும், மலரும, வெள்ளிப பொருப்
பும்விட் டயோத்தி வநதான''
*(சுந்தர: 1126)*

என்று குறிப்பிடுகின்றான்.

விபீஷணனோ, இராமனையே பற்றுக் கோடாகக் கொண்டான். சுக்ரீவனின் நிலையை இன்னதெனறு கூறவேணடியதிலலை. இவ்வாறு கம்பனுடைய காப்பியத் தலைவனாகிய இராமனை, பலரும் நன்கு அறிநதிருக்க, இராவணன் மட்டும், ''மனிசன்'' என்றே இறுதி வரை எணணி வந்தான். தனது தவறு இன்னதென்று அறிந்திருந்தும்கூட, தான் பெறற வரங்கள் காரணமாக, உணமையறியாது கருவம் கொண்டிருந்தான.

போர்ககளத்தில் இராமனும், இராவணனும் நேருக்கு நேர் சந்திக்க வேணடிய தருணம். எல்லையற்ற வரங்களின் வலிமை, தவ வலிமை, தன்னம்பிக்கை இவைகளையே இராவணன நமபினான். ஆனால் அறம் எனற ஒன்றினை ஏனோ மறந்தான் போர நிகழநதால் இராவணனுககுத் தோல்வி உறுதி என்பதை விபீஷணன எத்தனையோ முறை கூறியுள்ளான். 'வாலியையும் வென்றவன இராமன்' என்று கூறிய கும்பனுடைய சொற கள்கூட, தசமுகனாகிய இராவணனுடைய நெஞ்சை உறுத்தியதாகத தெரியவில்லை.

'என்னை வெல்பவர்கள் இவ்வுலகில் எவரேனும் இருப்பாராயின், அவர்கள் உன்னை வெல்லுதலும் உறுதி' என்ற பொருளில்,

'' எனனைவென்று உளரெனின
உனனைவென்று உயருதல் உணமை''

என்று தமபி கும்பகர்ணன் கூறிய சொறகளும இராவணன் செவியில் எட்டவில்லை. மேலும், தனது கருவத்தின காரணமாகத தங்கை சூர்ப்பணகையிடம்,

'' எததுயர் உனககுளது இனிப பழி
சுமக்க;
பத்துள தலைப்பகுதி, தோள்கள் பல
வன்றோ''

என்று கூறுகிறான் அரக்கர் வேந்தன். இத்துணைத தவ பலங்கள் நிரம்பியவன், இராமன முன்பு போா புரிய நின்றான்.

தனது மகன் போர்க்களததில இறந்த நிகழ்ச்சி இராவணன மன தைப் புண்படுத்திவிட்டது. புத்திர சோகத்திற்குக் காரணம், சீதையிடம் கொணட 'காமமே' என்று இப்போது உணர்ந்தான்.

'' சிலைத்தொடும் கொற்றம் முறறி
இந்திரன செலவம மேவி
நினைத்தது முடித்து நின்றேன்
நேரிழை ஒருத்தி நீரால்
எனக்குநீ செயயத் தக்க
கடனெலாம் ஏங்கி ஏங்கி
உனககுநான் செய்வ தானென
என்னின்யாா உலகத் துளளார்?''

*(இரா. சோகப்: 39)*

'மகனே! நீ எனக்குச் செய்ய வேண்டிய கடன்களை எல்லாம் உனக்கு நான் செய்ய வேண்டியவனுகி நிற்கிறேன. எனனைப் போனறோர் இம்மண்ணில் வேறு யாா இருப்பார்கள்?' என்று கூறி அழுகிறுன். இருப்பினும் இராமனிடம் போர் புரியவே அவன் முடிவு செய்கிறுன் இராவணன்.

'' நாசம்வந துற்ற காலை நலலதோர்
பகையைப் பெற்றேன்''

என்று நினைக்கிறுன் அரக்கர் வேந்தன். தேவர்களையும் வென்ற சூலத்தை இராமன்மேல் எறிந்தான் அவன். அதுவும் இராமனை ஏதும் செய்ய வில்லை. இதனைக் கண்ட பிறகே, இராவணனுக்குத் தான் அழிவது உறுதி என்று தெரிகிறது.

'' சிவனே அல்லன்; நான்முகன்
அல்லன்; திருமாலாம்
அவனே அல்லன; மெய்வர மெல
லாம அடுகினறுன்
தவனே எனனில செய்து முடிக்கும
தரனலலன்;
இவனே தான்அவ் வேதமுதல்
காரணன் எனறுன''

*(இரா வதைப்: 135)*

இவவாறு நினைக்கிறுன் தசமுகன். எதிரில் நிற்பவன சிவனும் அல்லன். திருமாலும அலலன, நானமுகனுகிய பிரமமனும் அலலன தவக்கோலம கொணடிருக்கிறுன். ஆனுல் தவமியற்றும வலிமையும் இவனிடம் இலலையே! பிறகு அவன யாா? வேத முதற் காரணன் எனபார்களே அவனுக இருப்பானே?'' என்ற சிந்தனை அவனைத் திகைப்படையச் செய்கிறது. இருப்பினும் எதிரில் நிற்கும் 'ஒருவனை' வெற்றி கொள்வதே தனது கடமை யென்று முடிவெடுக்கிறுன்; போரின் முடிவு என்னவாகும் என்பதைப்பற்றி இராவணன கவலை கொள்ளவில்லை

போரின முடிவில இராமன் அம்பினுல் இராவணன மணணில் சாய்ந்தான.

'' முக்கோடி வாழ்நாளும முயனறுடைய
பெருந்தவமும முதலவன் முன்னுள்
எககோடி யாராலும வெலப்படாய்
எனக்கொடுதத வரமும ஏனைத்
திக்கோடும் உலகனைத்தும் செருக்
கடந்த புயவலியும்''

மண்மகளைத் தழுவின. இந்நிகழ்ச்சி, காப்பிய ஆசிரியன் கம்பனையே குலுங்க வைத்துவிட்டது. இராவணனின் பட்டத்தரசி மண்டோதரி, தன் கணவன் மரணத்தைக் கேட்டுவிட்டு, ஓடி வருகிறுள். கற்பரசிதான் அவள்; ஐயமில்லை. ஆனுல் கணவனைத் திருதத ஏனே அவள் முயற்சி செயயவிலலை. அவள், புல பூணடுகளும் கரையும்படி அழுகிறுள்.

இராமனுடைய அம்பு, இராவணன் உடலை சல்லடைக் கண்கள் போலத் துளைத்திருந்தது அவன் மார்பின் மீது விழுந்து அழுகிறுள் மணடோதரி.

'சிவபெருமானுடைய பனி மலையை எடுத்த திருமேனியில், இன்று, எள் ளிருசகவும் இடமின்றி அம்புகள் ஊடுருவி உளளனவே. சானகியின்மீது வைத்திருந்த காதலை, இராவணனின் மனச்சிறையில் இருக்கும் என்று நினைத்துத் தேடிப் பார்த்ததோ இராமன் அம்பு?' என்ற பொருளில்,

'' வெளளெருக்கஞ் சடைமுடியான்
வெற்பெடுதத
திருமேனி மேலும் கீழும்
எள்ளிருககும் இடமின்றி உயிர்
இருக்கும்
இடம்நாடி இழைத்த வாறே?
கள்ளிருக்கும் மலர்ககூநதல சானகியை
மனச்சிறையில் கரந்த காதல
உளளிருக்கும் எனக்கருதிஉடலபுகுநது
தடவியதோ 'ஒருவன்' வாளி?''

என்று கூறி அழுகிறுள்.

சீதையைப் பற்றிய காதல் நினைவு இராவணனின் உடலின் உள்ளே இருக்குமோ என்று நினைத்து, இராமன் அம்பு, இராவணன் உடலில் புகுந்து தடவித் தேடியதாம். கற்பரசி மண்டோதரி இராமனை 'ஒருவன்' என்று குறிககின்றுள்.

இராமன் மனித நிலையில் இருந்து தெய்வ நிலைக்கு உயர்ந்துவிட்டான. நண்பர்களின பாராட்டுக்கள் நமக்கு எளிதில் கிடைப்பது. பகைவர்களும் பாராட்டும்படி வாழ்வதே சிறப்புடையது. இராம காதை நமக்கு உணர்த்தும நீதிகளுள இதுவும் ஒனறு. ★

# ராமானுஜரும் திருக்கோளூர் பெண்பிள்ளையும்

எம்பெருமானார், உடையவர், ராமா நுஜர், யதிராஜர் என்னும் பெயர்களை யுடைய ஸ்ரீ வைஷ்ணவ, விசிஷ்டாத் வைத மத ஸ்தாபகர் ஆசார்யர், தெனனாட்டில் ஆழ்வார் திருநகரிககுக் கிழககில் சுமார் 3 மைல் தூரமுள்ள திருக்கோளூர் என்ற திவ்ய ஸ்தலத் துக்கு எழுநதருளுமபோது, அவ்வூரி னின்றும் விடை கொணடு ஒரு பெண பிள்ளை வந்து, அவரைத் தணடனிட்டு நினறாள். ஸ்ரீ ராமாநுஜர் அவளைப் பார்த்து, "எல்லோரும் புகுமூர் திருக் கோளூர்; உனககுப் புறப்படுமூர் ஆகி, நீ அஙகிருந்து புறப்பட்டு விட் டாயே!" என்று கேட்க, அவள், மிகவும் நைச்யாநுஸந்தானத்துடன், ஸ்ரீ ராமாநுஜரிடம் 81 வாக்கியங்கள் விண்ணப்பஞ்செய்தாள்.

அவைகளில் திருமலையில எழுந் தருளி, பக்தகோடிகள், ஜீவன்மாக் களுக்கு ஸேவை ஸாதித்து அருளும் ஸ்ரீ திருவேங்கடமுடையானின் வைப வம், பெருமைகளைக் கூறுபவை. அவையாவன :

பிணமெழுபபி விட்டேனே தொண் டைமானைப போலே!

ஏதேனும் என்றேனே குலசேகரரைப் போலே!

மண் பூவையிட்டேனே குருவ நம்பி யைப் போலே!

யான சிறியேனென்றேனே திருமலை நம்பியைப போலே!

இனி ஒவ்வொரு வாக்கியத்துக்கும் உரிய வரலாறு, இதிஹாஸத்தையும் தெரிந்து இனபுறுவோம்.

பிணமெழுப்பிவிட்டேனே தொண்டை மானைப் போலே!

முன் ஒரு காலத்தில் கூர்மா என்ற வைதீகப் பிராமணர் ஒருவர் காசிக்குப் போக வேண்டுமென்று ஆசைப் பட்டார். அவர் தமது ஆசை நிறை வேறு முன்பே ஆசாரியன் திருவடிகளை யடைந்தார். (மரணம் அடைந்தார்).

அவருடைய குமாரர் கிருஷ்ண சர்மா, தநதையினது அஸ்திகளை யாவது கங்கையில சேர்க்க வேண்டு மென நினைத்தார் இளைய ... மனைவி, மூன்று மாதக் குழந்தையுடன கால் நடையாகப் புறப்பட்டார். சிறு கைக்குழந்தைககாரியான தம மனைவியால் நடகக இயலவில்லை. இவர்களை எவரிடத்திலாவது ஒப் படைததுவிட்டுத் தாம் மட்டும் பய ணததைத் தொடஙகலாம் என்ற நினைப்புடன், சாமா, கருணையின வடி வான தொணடைமான் சககரவாத்தி யிடம் சென்று, அவனிடம தம மனைவி, குழந்தையை ஒப்படைத்தார்; மன நிமமதியுடன காசியாத்ரை சென்றார்.

தொணடைமான சக்கரவர்த்தியும் அவர்களை ஏற்றுக் கொணடதும, அவர்களுக்குப் பாதுகாபபான இட மளிதது, சகல சௌகரியங்களையும் செய்து கொடுத்து, தஞ்சங் கொடுத் தான்.

சிறிது காலத்திறகுப் பின் அரசன் ராஜ்ய விவகாரஙகளைக் கவனித்து, அவைகளில் சிரத்தையாயிருந்ததனல், அவர்களை மறநதேவிடடான.

கிருஷ்ணசர்மா காசியில், பிதாவின் அஸ்திகளைக் கங்கையில் சேர்த்து விடடுத் தீர்த்தமும் எடுத்துக் கொணடு திருமபி வநதார். அரச னுககுத் தீரத்ததததைச் சமர்ப்பித் தான். மனைவி, குழநதையைக் காண விரும்பினன, அரசனும் உடனே ஓடிச் சென்று பாரத்தான். அவர்கள், சரி யாக அரசன கவனிக்காததால், பசி யால் மெலிந்து செத்துக்கிடந்தார்கள். அதைக் கணடு அரசன் செய்வதறி யாமல் திகைத்தான்.

அரசன் உடனே கிருஷ்ணசர்மா விடம் வந்து, அவர்கள் ஒரு வாரத் துக்கு முன் அந்தப்புரமாதர்களுடன் சேஷாசலத்திலிருக்கும் (திருமலை) காருணயமூர்த்திக் கருணைக் கடலான ஸ்ரீனிவாசனைத் தரிசிக்கப் போயிருக் கிறார்கள், இரண்டு நாட்களில் வநது விடுவார்கள் என்று கூசாமல் ஒரு பொய்யைக் கூறி தப்பித்துக் கொண்டான்.

உடனே அரசர் பயபக்தி வாசன் ஸ்ரீநிவாசனை நினைத்து வணங்கி, "ப்ரபோ! அநாதரக்ஷகா! ஆபத்பாந்தவா! கருணாநிதியே! பாவ மோசகா! ஆச்ரிதரக்ஷகா! என்னை இந்த பாபத்திலிருந்து விடுவி; ரக்ஷி. இல்லையேல் என்னையும் உன திருவடி களில் சேர்த்துக்கொள்" என்று பல முறை நெஞ்சுருகி, கண்ணீர் சோர, பிரார்த்திததான்

பரந்தாமன ஸ்ரீ வேஙகடேசன் மனம இரங்கினன்; அரசனுக்குப் ப்ரதயக்ஷமானன். அவ்விரணடு சட லங்களையும அங்குக் கொணடுவருமாறு கட்டளையிட, அச்சடலங்கள் கொணடு வரபபட்டன. ஸ்ரீ வேங்கடேசவரன தன ஆச்சர்ய சகதியினல் அவாகளுக்கு உயிர் கொடுத்தான. எல்லாம எமபெருமாள் கருணை! தொணடை மான் சக்கரவர்த்தி ஆனநதமடைநது, பகவானைப் பிரார்த்தித்து, மகிழ்ச்சி யுடன், கிருஷ்ணசர்மாவிடம் அவ ருடைய மனைவி, குழநதையை ஒப்பு விகக, கிருஷ்ணசாமாவும் விடை பெறறு, மகிழ்ச்சியுடன் தம ஊருக்குச் செனறார்.

திரு டி. என. கிருஷ்ணமாச்சாரியார், வளளியூர்

அரசனின் நிகரற்ற பகதியால், இநதச் செயறகரிய, அதிமானுஷ காரி யத்தை எமபெருமான் ஸ்ரீ திருவேங் கடமுடையான் செய்து ரக்ஷித்தார். இதைத்தான் இராமானுஜரிடம் திருக் கோளூர்ப் பெண பிள்ளை, "தொண் டைமானைப்போல பிணமெழுப்பி விட்டேனோ" என்றாள்.

ஏதேனும் என்றேனே குலசேகரரைப் போலே!

"ராஜா நம் குலசேகரம்" என்று சக்கரவர்த்தியாகச் சிறந்து விளங்கி,

பின்பு குலசேகராழ்வார் எனப் பெயர் பெற்றவர் திருமலை ஸ்ரீனிவாசனை ஸேவிக்க விருப்புற்று திருமலை எழுந தருளினர். திருவேங்கடமுடையானை ஸேவித்தார்; களித்தார்; அடிபணிந் தார். ஆனந்தமிகுதியினல், கீழ்ககணட வாறு இசையுடன் ஆடிப்பாடினர்.

"கோனேரி (ஸ்வாமி புஷ்கரிணி) வாழும் குருகாய்ப் பிறப்பேனே,"
(குருகு = நாரை)

"மீனைப் பிறக்கும் விதியுடையேனு வேனே!",

"பொனவட்டில் பிடித்து உடனே புகப் பெறுவேனுவேனே!",

"செண்பகமாய் நிற்கும் திருவுடை யேனுவேனே!",

"தம்பகமாய நிற்கும தவமுடையே னுவேனே!",

"அன்னயை பொற்குவடாம் அருந தவததனுவேனே!",

"கானுருய்ப்பாயும கருத்துடையே னுவேனே!",

"நெறியாய்க் கிடக்கும் நிலையுடைய னுவேனே!",

"படியாய்க் கிடந்து உன் பவளவாய் காண்பேனே!"

"எம்பெருமான பொன்மேல் ஏதேனு மாவேனே!"

என்றும் மகிழ்ச்சிப் பெருக்கினுல் பாடினா.

திருவேங்கடவனின் வைபவம், பெருமைகளை உணாந்தவர், பகவானை ஸேவிக்க, அடிமை செய்ய, திருமலை யில் திர்யக் (பிராணி, பறவை, ஊா வன), தாவரங்களில் (மரம், செடி, கொடி) ஏதேனும் ஒன்ருய்ப் பிறந்து பேறு பெருவேனுக வேணும் என்று புலம்பிக் கதறினர்

(குருகு = நாரை. விதி = பாக் கியம். திருவேங்கடமுடையான் வாய நீருமிழ்கின்ற தங்க வட்டிலை கையி லேந்திக் கொண்டு பரிஜனங்களுடன் உள்ளே புகும் பாக்கியம், செணபக மரமாய், தம்பகமாய் நிற்கும் = புத ராய் நிற்கும, திருமலையிலே அப்படிப் பட்ட பொன்மயமான சிகரமாவ தற்கு உரிய அருமையான தவத்தை யுடையவனுகக்கடவேன், திருமலையின் மேல் ஒரு கானுருய்ய பெருகும்படி யான அத்யவஸாயத்தை (நினைப்பை), போகிற வழியாயக கிடக்கின்ற நிலையை, எம்பெருமான் வாசலில் உள் (மண்டபத்தில) படியாயப் பொருநதிப் பவழமபோன்ற அழகிய அதரத்தை (வாயை), ஏதேனுமொரு பதார்த்தமாக பகவத ஸந்நிதிகளில், கருவறையில் ) பெருமாளுக்கு முன உள்ள படிக்கு குலசேகரப்படி என வழங்கப்படுகிறது. ஒவ்வொரு பிறப் பிலும் ஒவ்வொரு அநுப பக்தி (குறை) தோன்றிக கொணடேவர கடைசியில் ஏதேனுமாவேனே என்ருர். திருவேங் கடவனின வைபவம், பெருமை என்னே!

மண்பூவையிட்டேனே குருவ
நமபியைப்போலே!

குருவபுரம் எனறு ஒரு ஊர். அதில் வஸித்து வநத ஒரு குயவர், தினமும காலையில தம் (மண) வேலையை ஆரம் பிப்பதற்கு முன், தாம் மணணினுல் செய்து வைததிருந்த திருவேங்கட வனின் பாதாரவிந்தங்களில் (திருவடி களில்)மண்ணினுல் ஒரு பூவைச்செய்து, சமர்ப்பித்துவிட்டு, பிரார்த்தனை, வணக்கம் செலுத்திவிட்டுப் பிறகே தம் வேலையை ஆரம்பிப்பது வழக்கம். அவ்வளவு பக்தி, ஈடுபாடு, சிரத்தை.

அப்படி, தினமும், அவர் சமர்ப் பிககும் மண் பூ, திருமலையிலுளள திரு வேஙகடவனின பாதபங்கஜங்களில் சேர்ந்து, மணம கமழ்நது, திகழநது கொணடிருநதது. இவவதிசயததை ஆர்ச்சகாகள் கண்டார்களா, அரசரா யிருந்த தொணடைமான சககரவாத் திக்கும் தெரிவித்தாாகள். அரசன நேரில் வநது பார்த்தான்; ஆசசரிய மடைந்தான். ஒனறும விளங்காம லிருந்தான். உடனே எம்பெருமான் ஸ்ரீ வேங்கடேசன் தன் பக்தனின தூய அன்பை வெளிப்படுத்த எண்ணினன். பகதன் இடும மண பூவே, தமக்கு மிக உகந்த பரிமளம் மிகக பூவாயிருக்கிற தென்று கூறியருளினர்.

அரசனும் மற்றையோரும் அப்படிப் பட்ட பரமபக்தரை நேரில் காண விரும்பி, குருவ நமபியைப பார்த்து, அவர் பகதியை வியந்து பாராட்டி னர்கள்.

எம்பெருமானிடம் கொள்ளும் ஆழ்ந்த பரமபக்தியே சிறந்தது சமர்ப் பிக்கும் பொருளின் தன்மையில்லை என் பது விளங்குகிறது; எல்லாம்ஸ்ரீ வேங கடேஸ்வரனின் ப்ரபாவம், மகிமை, அருள்தான்

யான சிறியேனென்றேனே திருமலை
நம்பியைபபோலே

ஸ்வாமி எம்பெருமானுர் (ராமா னுஜர்) திருவேங்கடவனைச் சேவிக்க விரும்பி, திருமலையிலே திருப்பரி யட்டப்பாறை பக்கம் எழுந்தருள, பெரிய திருமலை நம்பியென்ற ஒரு மகான், பெருமாளுடைய தீர்த்த, பிரசாதங்களை யெடுத்துக் கொண்டு எதிரே வந்து, ஸ்ரீ ராமாநுஜருக்கு அருளினர்.

ஸ்ரீ எமபெருமானுர் திருமலை நம்பி களின் திருவடிகளில் சாஷ்டாங்க ப்ரணமம் பண்ணி, தீர்த்த ப்ரசாதங் களை யேற்றுக் கொண்டார். திருமலை நம்பியைப் பார்த்து, "இவனுக்காகத் தேவரீர் இவ்வளவு தூரம் எதிர் கொண்டுவர வேணுமோ? யாரேனும் சிறியவரை அனுப்பலாகாதோ?" என விண்ணப்பம் செய்தார்.

திருமலை நம்பிகள் புன்னகை செய்து "இந்தத திருவேங்கட ஸ்தலத்தில், நன்கு ஆராய்ந்து பார்த்தும் என்னை விடச் சிறியவரைக் காணமுடியவில்லை; ஆதலால நானே வந்தேன்" என் றருளிச செய்தார்.

என்ன விநயம், என்ன அருள், என்ன அடககம்! எல்லாம் ஸ்ரீ திரு வேங்கடமுடையானின் மகிமை, ப்ரபாவம, பெருமையே!

எம்பெருமானுடைய அடியார் களுள் தானே சிறியவன், மற்றவர்கள் தன்னைக் காட்டிலும பெரியோரே யென்ற எண்ணம் தோன்ற வேணும். இதுதான உண்மையான ஸ்ரீ வைஷ்ண வனின் ஸ்வரூபம். இதையே திருமலை நம்பி நன்கு உணாந்து, அனுஷ்டித்தும் காட்டினர். 

# முக்கவி கண்ட காப்பியம்

## "சுந்தர காண்டம்"

திரு. பு. ஜி. அனந்த சுப்ரமண்யம்,
(சாபேயன்)
திருப்பதி

சீதை தனக்கும் இராவணனுக்கும் இடையில் தர்ப்பையைப்போட்டதைக் கீழ்வருமாறு கம்பர் கூறுகிறார்.

"மல் அடு திரள்தோள் வஞ்சன் மனம் பிறிது ஆகும் வண்ணம்
கல்லொடும் தொடர்ந்த நெஞ்சம் கற்பின் மேல் கண்டதுண்டோ
இல்லொடுந் தொடர்ந்த மாதர்க்கு ஏய்வன அல்ல வெய்ய
சொல்லிது தெரியக் கேட்டி துரும் பெனக் கனன்று சொன்னாள்"

பிராட்டி இராவணனது முகத்தை நேரிற் பார்க்கவும் விருப்பங்கொள்ளாது கீழே கிடந்த துரும்பை எடுத்து இருவருக்கிடையே போட்டு அவனை அத்துரும்பாக மதித்து 'மகளிர் மனம் கண்டபடி கெடாது உறுதியாக இருப்பதற்குக் கற்பென்பதே சிறந்த கருவியாகும். அப்படிப்பட்ட கற்பைப்பூண்ட என் போன்றார்க்கு ஏலாதவற்றைப் பிதற்றுகின்றாய், நான் சொல்வதைக் கேள்" என்று.

तृन धरि ओट कहति वैदेही ।
सुमिरि अवधपति परम सनेही ॥

என்று துளசிதாஸரும்,

उवाचाधोमुखी भूत्वा निधाय तृणमन्तरे ॥

என்று அத்யாத்ம ராமாயணமும் கூறுகின்றன.

அதாவது இராமாயணத்தில் சில இடங்களில் வால்மீகியின் கருத்தை மற்ற இராமாயணங்களிலும் காணலாம் என்பதாகும். இதேபோல் வால்மீகியைப் பின்பற்றி துளசிதாஸர் கூறுகிறார். வால்மீகி கூறுகிறார்:

अनन्या राघवेनाहं भास्करेण प्रभा यथा ।

எவ்விதம் ஒளியானது கதிரவனுடன் இருக்கிறதோ அதேபோல் நான் இராமனோடு ஒன்றுபட்டவள் என்று கூறும் கருத்தை துளசிதாஸர் வெகு அழகாகக் கூறுகிறார்.

सुनु ! दशमुख ! खद्योत प्रकासा ।
कबहुँ कि नलिनी विकासा ॥

'ஹே! இராவணா! விளக்கு விட்டில் பூச்சியின் ஒளியால் தாமரை மலர்ந்து விடுமா?" என்று மேலும் கூறுகிறாள்.

"இராமனின் வில்லுனுடைய பெரிய சப்தத்தை நீ கேட்டதில்லையா? ஹே! இராவணா! உன் செயல் மிகவும் மட்டமான குணமுடையவன் செய்வது போல் இருக்கிறது. புருஷ சிங்கங்களான அவ்விரு சகோதரர்கள் ஆச்ரமத்தைவிட்டு விலகிய பிறகு என்னை கடத்திக் கொண்டு வந்தாயே! மனிதர்களுக்குள் மட்டமானவனே! அந்த இரு புலிகளுக்குமுன் நீ ஒரு நாய்க்குச் சமம்" என்று கூறுகிறார். இங்கு अधम என்ற பதத்தை துளசிதாஸரும் கையாண்டுள்ளார்.

सठ सूने हरि अनेहि मोहि
अधम निलज्ज लाज नहीं होती ॥

'முட்டாளே, வெட்க மற்றவனே! என்னை தூக்கிக் கொண்டு வந்தாயே! மனிதர்களுக்குள் மட்டமானவனே" என்று அத்யாத்ம ராமாயணம் இன்னும் கொஞ்சம் விளக்கமாகக் கூறுகிறது.

राघवाद्बिभ्यता नूनं भिक्षुरूपं त्वया धृतम् ।
रहिते राघवाभ्यां तु शुनीव हविरध्वरे ॥
हृतवानसि मां नीच तत्फलं प्राप्यसे चिरात् ॥

"இராமனுக்குப் பயந்து ஸந்யாஸியாக வந்து என்னை, இருவரும் இல்லாத சமயம் பார்த்து, யாக சாலையில் வைத்திருக்கும் ஹவிர்பாகத்தை எப்படி நாய் எடுத்துச் செல்லுமோ, அதுபோல் தூக்கிக் கொண்டு வந்தாயே. ஏ, நீசனே! இதன் பலனைக் கூடிய விரைவில் அனுபவிப்பாய்" என்று. இங்கேயும் "அதம"! என்ற பதத்திற்குப் பதில் "நீச" என்று கூறப்பட்டுள்ளது. ஆனால் இரண்டிற்கும் பொருள் ஒன்றே. மேலும் கூறுகிறாள். "ஹே! இராவணா! நீதியற்ற உன்னையும் உன் குலத்தோரையும், அரசாட்சியையும் அழிக்கப் போகிறான் இராமன்" என்று வால்மீகி கூறுவதை கம்பர் அப்படியே கூறுகிறார்.

"வெம்சினம் அரக்கரை விளித்து வீயுமோ
வஞ்சனை நீ செய வள்ளல் சீற்றத்தால்
எஞ்சலில் உலகெலாம் எஞ்சும் எஞ்சுமென்று
அஞ்சுகின்றேன் இதற்கு அறனும் சான்றரோ"

"எனது நாயகனுடைய சீற்றம் உன்னை மாத்திரமேயின்றி உன் இனத்தவரான அரக்கரையெல்லாம் கொன்றாலும் அடங்காது. இப்படி நீ ஒருவன் செய்த பாவத்தால் இவ்வுலகமெல்லாம் அழிந்து விடுமே என்று அஞ்சுகிறேன்' என்று சீதை கூறுவதாகக் கம்பர் கூறுகிறார்.

இராவணன் ஸந்யாஸியாக வந்து ஏமாற்றியதை அத்யாத்ம ராமாயணமும் கூறுகிறது.

राघवाद्बिभ्यता नूनं भिक्षुरूपंत्वया धृतम् ।

இராகவனிடத்தில் பயந்து இராவணன் பிக்ஷு உருவங்கொண்டானென்று. இதனால் இராவணன் நேரிடையாக இராமனைப் பார்க்கப் பயந்து இருந்தான் என்று தெரிகிறது. இந்தக் கருத்தை கம்பர் வெளிப்படையாகவே கூறுகிறார்.

"அஞ்சினை யாதலானன்றரிய னற்ற நோக்கி
வஞ்சனை மானென்றேவிமாயையான் மறைத்து வந்தாய்"

இவ்விதம் சீதை பலவாறாக இராவணனைப் பார்த்து சாடுகிறாள்.

(தொடரும்)

# செய்திச் சுருக்கம்

## திருப்பதியில் 'டெலக்ஸ்' வசதி

திருப்பதியில் 26-3-79 அன்று தந்தி மற்றும் 'டெலக்ஸ்' தொலைப் போக்குவரத்து அலுவலகக் கட்டிடத்திற்கு, இந்திய அரசு செய்தித்துறையின் செயலாளரும், இந்தியத் தபால் மற்றும் தந்திக் குழுவின் தலைவருமான திரு. ஜே. ஏ. தவே, ஐ.ஏ.எஸ். அவர்கள் அடிக்கல் நாட்டினர். மற்றும திருப்பதியில் 'டெலக்ஸ்' தொலைப் போக்குவரத்து வசதியினையும் தொடக்கி வைத்தார். இதனை ஒட்டி ஏற்பாடு செய்யப்பட்ட விழாவிற்கு வருகை புரிந்தோரை, ஆந்திர மாநில தபால் தந்தி இலாகாவின் தலைமை மேலாளரான திரு. டி. என். சௌத்ரி அவர்கள் தம் வரவேற்புரையில் ஆந்திராவில் 11-வதாகவும், இந்தியாவில் 112-வதாகவும் இவ் 'டெலக்ஸ்' வசதி அலுவலகம் ஆரம்பிக்கப்பட்டுள்ளது என்று குறிப்பிட்டு, திருப்பதியில் தபால் தந்தி இலாகாவினரால் மேற்கொள்ளப்படும் எல்லா முயற்சிகளுக்கும் பலவகைகளில் உதவி புரிந்துவரும் திருமலை திருப்பதி தேவஸ்தானத்தைப் பாராட்டிப் பேசினர். திரு. ஸ்ரீநிவாசமூர்த்தி அவர்களின் ஆண்டறிக்கையைத் தொடர்ந்து, திரு. ஜே. ஏ. தவே அவர்கள், புதிய கட்டிடத்திற்கான அடிக்கல்லை நாட்டினர். பின்னர் 'டெலக்ஸ்' வசதி முறையினையும் தொடக்கி வைக்கும் வகையில், இவ்விழாவைப்பற்றிய முதல் 'டெலக்ஸ்' செய்தியினை சென்னை தலைமை தபால் தந்தி இலாகாவுக்கு அனுப்பி, அங்கிருந்து வந்த வாழ்த்துச் செய்தியினையும் பெற்றுக்கொண்டார். இவ் விழாவிற்குத் தலைமை தாங்கிய தி.தி. தே. செயலாட்சித் தலைவர் திரு. பி. வி. ஆர். கே. பிரஸாத் அவர்கள் உரையாற்றுகையில், இவ் 'டெலக்ஸ்' வசதி பெருமளவில் தேவஸ்தான நிருவாகத் துறையினர்க்குப் பயன்படும் என்று கூறி, விரைவில் திருமலையிலும் இவ் வசதி மேற்கொள்ளப்படவேண்டும் என்றும் திரு.ஜே ஏ. தவே அவர்களைக் கேட்டுக் கொண்டார். வட்டாரப் பொறியாளர் திரு ஜெயராமராவ் அவர்களுடைய நன்றி நவிலலுடன் விழா இனிது முடிந்தது.

## திருப்பதியில் தமிழக அமைச்சர்

திருப்பதியில் 28-3-79 அன்று ஸ்ரீ வேங்கடேஸ்வரா பல்கலைக்கழகத்தின் தமிழ்ச் சான்றிதழ்ப் பயிற்சி படிப்பினை தமிழக கல்வி அமைச்சர் திரு. ஏ. அரங்கநாயகம் அவர்கள் துவக்கி வைத்தார். தமிழ்நாடு நிலவருவாய் மற்றும் வர்த்தக வரி ஆணையர் திரு. சி. ஜி. ரங்கபாஷ்யம் ஐ ஏ.எஸ். அவர்கள், 1978-ம் ஆண்டு தமிழ்த் துறையினரால் வெளியிடப்பட்ட நான்கு நூல்களை வெளியிட்டார்.

## 31வது நினைவு நாள் விழா

தாள்ளபாக்க ஸ்ரீ அன்னமாச்சார்யாவின் நினைவுநாள் விழா மற்றும் ஸ்ரீ வேங்கடேஸ்வரா அன்னமாச்சார்யா தியாகராஜ இசை விழா ஆகியவை திருப்பதியில் தி. தி. தேவஸ்தானத்தாரின் அன்னமாச்சார்யா திட்டக்குழுவின் சார்பில் 25-3-79 முதல் 1-4-79 வரை வெகு விமர்சையாக நடைபெற்றன. 25-3-79 அன்று காலை ஸ்ரீவேங்கடேஸ்வர சுவாமி மற்றும் ஸ்ரீ அன்னமாச்சார்யா திருவுருவப்படங்களுடன் கூடிய ஊர்வலம் ஒன்று மேற்கொள்ளப்பட்டது. அன்றுமாலை 6 மணி அளவில் இந்நினைவுநாள் விழா இனிது துவங்கியது. இறைவணக்கத்தைத் தொடர்ந்து, தி.தி.தே. செயலாட்சித் தலைவர் திரு. பி.வி.ஆர்.கே. பிரஸாத் அவர்கள் தம்முடைய வரவேற்புரையில், அன்னமாச்சார்யா கீர்த்தனைகளின் பெருமையைப் பரப்பும் முயற்சியை ஒருபகுதி நேரபணியாக கொள்ளாது, நன்கு மேற்கொள்ளப்பட்ட திட்டத்தின்கீழ் செயற்படுத்த தேவஸ்தானம் முழுமூச்சுடன் செயல்பட்டு வருகின்றது என்று குறிப்பிட்டு, இவ் வகையில், செப்பேடுகளில் பொறிக்கப்பட்ட அன்னமய்யாவின் கீர்த்தனைகளை எடுத்தெழுதி, தொகுதிகளாக வெளியிடும் பணியை ஒரு திட்டத்தின் கீழும், அக்கீர்த்தனைகளின் அருமை பெருமைகளை ஆஸ்தான சங்கீத வித்வான்கள், துறைக் கலைஞர்கள் ஆகியோர் மூலமாக பரப்பும் பணியை மற்றொரு திட்டத்தின் கீழும் செயற்படுத்தப்பட்டு வருகிறது என்றும் கூறினர். இது சம்பந்தமாக புகழ்பெற்ற இசை அறிஞர்களின் உதவியையும் தேவஸ்தானம் நாடி உள்ளது என்றும் அவர் குறிப்பிட்டார். இவ் விழாவினைத் துவக்கி வைத்து உரையாற்றிய, திருப்பதி ஸ்ரீவேங்கடேஸ்வரா பல்கலைக்கழகத்தின் துணைவேந்தர் பேராசிரியர் எம். சாந்தப்பா அவர்கள், பல்கலைக்கழகத்தில் அன்னமாச்சார்யாவின் இலக்கியப் படைப்புக்களைப்பற்றி பல்வேறு ஆராய்ச்சிகளை மேற்கொள்ளும் வகையில் ஒருதுறையை ஏற்படுத்துவது நன்மை பயக்கும் என்று கூறி, அதற்கு தி. தி. தே. உதவி செய்தல் வேண்டும் என்றும் கேட்டுக்கொண்டார். இவ்விழாவில் சிறப்பு விருந்தினராக பங்கேற்ற, உஸ்மானியா பல்கலைக்கழகத்தின் தெலுங்குத் துறைப் பேராசிரியர் டாக்டர். பி. ராமராஜு அவர்கள் தம்முரையில் ஸ்ரீ அன்னமாச்சார்யா பிறந்த இடமான தாள்ளபாக்கத்தினை தி. தி. தே. தன் மேற்பார்வையில் ஏற்றுக்கொண்டதைக் குறிப்பிட்டு, விரைவில் தாள்ளபாக்கம் ''ஆந்திரநாட்டு திருவையாறாக'' மாற தேவஸ்தானம் முழு முயற்சிகளை மேற்கொள்ள வேண்டும் என்று கேட்டுக் கொண்டார். தொடர்ந்து பேசுகையில் ஆந்திர வேதமாகக் கருதப்படும் அன்னமாச்சார்யா கீர்த்தனைகளின் இலக்கியச் செல்வம், பல்வேறு தலைப்புக்களில் ஆராய்ச்சிப்பட்டம் பெற பலவகைகளில் துணைபுரியும் என்றும் கூறினர். பின்னர் துணைவேந்தரவர்கள் அன்னமாச்சார்யா கீர்த்தனைகளின் 26-வது தொகுதியினை வெளியிட்டார். பிறகு தி. தி தே. கல்வி அலுவலர் பேராசிரியர் பி. ரங்கய்யா அவர்கள், அன்னமாச்சார்யா சந்ததியினரை மேடையில் கௌரவித்தார். இவ்விழாவில் பங்கேற்ற தி.தி.தே. பொறுப்பாண்மைக் குழு உறுப்பினர் திரு. எம். சந்திரசேகரம்நாயுடு அவர்கள், இவ்விழா ஒட்டி நடைபெற்ற இசைப்போட்டியில் வெற்றி பெற்றவர்களுக்குப் பரிசுகள் வழங்கினர்.

அன்றுமாலையும், அதனைத் தொடர்ந்து மற்ற ஏழு நாட்களின் போது காலையும் மாலையும், புகழ்பெற்ற இசைக் கலைஞர்களின் கச்சேரி நிகழ்ச்சிகளும், பல்வேறு அறிஞர்களின் சொற்பொழிவு நிகழ்ச்சிகளும் நடைபெற்றன. 

# ராசிபலன் (1-4-79 முதல் 30-4-79 வரை)

டாக்டர் டி. அர்க்கசோமயாஜி, M.A., Ph.D.
திருப்பதி.

## மேஷம்

(அசுவனி, பரணி, கார்த்திகை முதல் பாதம் முடிய)

ராகுவினுல் கவலே. சனியினுல் பண நஷ்டம், கருத்து வேறுபாடுகள், தன் பிள்ளேகள் அல்லது பெண்கள் சம்பந்தப்பட்ட விஷயங்களினுல் கவலேக்குள்ளாதல்; குருவினுல் உறவினர்கள் மூலம் கவலேகளுக்குள்ளாதல்; செவ்வாயினுல் கவலேகள், பண நஷ்டம் அல்லது கண் சம்பந்தப்பட்ட நோயினுல் அவதியுறல் அல்லது மனேவிக்கு மனயமைதியின்மை; புதனுல் உடல் நலம் கெடல் அல்லது இகழ்ச்சிக்குள்ளாதல் அல்லது கருத்து வேறுபாடுகள்; சுக்ரனுல் மாதத்தின் 17-ம் தேதி வரை பண வரவு அல்லது புதிய ஆடை ஆபரணங்கள் மற்றும் மற்றைய கிரகங்களால் ஏற்படும் தீய விளேவுகளிலிருந்து விடுபடும்வகையில் சுக்ரன் நன்மைகள் புரிதல்; சூரியனுல் மாதத்தின் இறுதி 17 நாட்களின்போது வயிறு சம்பந்தப்பட்ட நோயினுல் அவதியுறல் அல்லது பண நஷ்டம் அல்லது பிரயாணமும் உடல் நலம் கெடலும்.

## ரிஷபம்

(கார்த்திகை 2-ம் பாதம் முதல், ரோகிணி, மிருக சீரிஷம் 2-ம் பாதம் முடிய)

ராகுவினுல் கருத்து வேறுபாடுகள்; சனியினுல் பண நஷ்டம் அல்லது நண்பர்களிடமிருந்து பிரிவு அல்லது உற்றார் உறவினரிடமிருந்து பிரிவு; குருவினுல் ஏமாற்றங்களுக்குள்ளாதல்: செவ்வாயினுல் வெற்றியும் பண வரவும்; புதனுல் பண வரவு, புதிய நண்பர்கள், கேளிக்கைகளில் ஈடுபடுதல் அல்லது வாகன வாய்ப்பு போன்றவைகள்; சூரியனுல் 14-ம் தேதி வரை முயற்சிகள் வெற்றியடைதல் ஆனுல் இறுதி நாட்களின்போது எந்தவித லாப நஷ்டத்தையும் ஏற்படுத்தாது; சுக்ரனுல் 17-ம் தேதி வரை கருத்து வேறுபாடுகள், இகழ்ச்சிக்குள்ளாதல் ஆனுல் இறுதியில் நண்பர்களும், பண வரவும்.

## மிதுனம்

(மிருக சீரிஷம் 3-ம் பாதம் முதல், திருவாதிரை, புனர் பூசம் 3-ம் பாதம் முடிய)

ராகுவினுல் பண வரவு; சனியினுல் பண வரவு, புதிய ஆடை ஆபரணங்கள், குடும்பத்தில் மகிழ்ச்சி அல்லது வாகன வாய்ப்பும்கூட; குருவினுலும் செவ்வாயினுலும் பண வரவு; புதனுல் 17-ம் தேதி வரை கேளிக்கைகளுக்குள்ளாதல், பண வரவு, புதிய ஆடை ஆபரணங்கள், அல்லது சமய நிகழ்ச்சிகளில் ஈடுபடுதல் ஆனுல் இறுதியில் கருத்து வேறுபாடுகள் அல்லது மதிப்புக் குறைதல்; புதனுல் வெற்றி, பண வரவு, மகிழ்ச்சி; சூரியனுல் உடல் நலம் மேன்மை, மதிப்புயர்தல், வெற்றி.

## கடகம்

(புனர் பூசம் 4-ம் பாதம் முதல் பூசம் ஆயில்யம் முடிய)

ராகுவினுலும் சனியினுலும் பண நஷ்டம்; குருவினுல் கருத்து வேறுபாடுகள், பொருள் நஷ்டம், இகழ்ச்சிக்குள்ளாதல்: செவ்வாயினுல் பண நஷ்டம் அல்லது இகழ்ச்சிக்குள்ளாதல்; புதனுல் நன் முயற்சிகளுக்கு இடையூறுகள் ஏற்படல்; சுக்ரனுல் பண வரவு, புதிய ஆடை ஆபரணங்கள், குடும்பத்தில் மகிழ்ச்சி, மற்றைய கிரகங்களினுல் ஏற்படும் தீமைகளே ஒரு வகையில் முடிந்தவரை இக்கிரகம் குறைக்கும்; சூரியனுல் மாதத்தின் முதல் 15 நாட்களின்போது உடல் நலம் கெடல் அல்லது முயற்சிகள் தடைபடுதல் அல்லது பண நஷ்டம் ஆனுல் இறுதி நாட்களின்போது எல்லா வகைகளிலும் வெற்றி கிடைக்கப்பெறல்.

## சிம்மம்

(மகம், பூரம், உத்திரம் முதல் பாதம் முடிய)

ராகுவினுல் கவலேகள்; சனியினுல் உடலில் காயம் ஏற்படல் அல்லது உறவினர்களால் தீங்கு ஏற்படல் அல்லது மேற்கொள்ளப்படும் பிரயாணத்தின்போது கவலேகளுக்குள்ளாதல் அல்லது தன் பிள்ளே அல்லது பெண்களுடன் கருத்து வேறுபாடு கொளல், பண நஷ்டம்; குருவினுல் பிரயாணமும் உடல் நலம் கெடலும்; செவ்வாயினுலும் பண நஷ்டம் அல்லது மதிப்புக் குறைதல்; புதனுல் பண வரவு, புதிய ஆடை ஆபரணங்கள் அல்லது அல்லது மக்கட்பேறு; சுக்ரனுல் 17-ம் தேதி வரை பெண்கள் மூலம் கவலேகளுக்குள்ளாதற்குரிய வாய்ப்பு, ஆனுல் இறுதி நாட்களின்போது புதிய ஆடை ஆபரணங்கள், அல்லது வீடு வாய்ப்பு; சூரியனுல் மாதத்தின் முதல் 15 நாட்களின்போது உடல் நலம் கெடல் அல்லது மனேவிக்கு மன மகிழ்ச்சியின்மை ஆனுல் இறுதி நாட்களின் போது பண நஷ்டம் அல்லது ஏமாற்றங்கள்.

## கன்னி

(உத்திரம் 2-ம் பாதம் முதல், அஸ்தம், சித்திரை 2-ம் பாதம் முடிய)

ராகுவினுலும், சனியினுலும் கவலேகள்; குருவினுல் அதிக பண வரவு; செவ்வாயினுல் மனேவியுடன் கருத்து வேறுபாடுகொளல் அல்லது கண் அல்லது வயிறு சம்பந்தப்பட்ட நோயினுல் அவதியுறல்; புதனுல் கருத்து வேறுபாடுகள்; சுக்ரனுல் மாதத்தின் முதல் 17 நாட்களின்போது உடல் நலம் கெடல் அல்லது இகழ்ச்சிக்குள்ளாதல்; சூரியனுல் மனேவிக்கு மனயமைதியின்மை அல்லது வயிற்றுக் கோளாறு.

## துலா

(சித்திரை 3-ம்பாதம் முதல், ஸ்வாதி, விசாகம் 3-ம் பாதம் முடிய)

ராகுவினுல் மகிழ்ச்சி; சனியினுல் பண வரவு அல்லது கேளிக்கைகளில் ஈடுபடல்; குருவினுல் பண நஷ்டம் அல்லது மதிப்புக் குறைதல்; செவ்வாயினுல் வெற்றியும் அதிக பண வரவும்; புதனுல் வெற்றி அல்லது பதவி உயர்வு; சுக்ரனுல் 17-ம் தேதி

வரை புதிய உறவினர்கள், பெரியோர் களின் பாராட்டுதல்களுக்குள்ளாதல், பண வரவு, புதிய நண்பர்கள் அல்லது மக்கட்பேறு; ஆனுல் இறுதியில் உடல் நலம் கெடல் அல்லது மதிப்புக்கெடல்; சூரியனுல் முதல் 15 நாட்களின்போது உடல் நலமேன்மை, வெற்றி. ஆனுல் இறுதி நாட்களின்போது பிரயாணம் அல்லது வயிறு சம்பந்தப்பட்ட நோயி னுல் அவதியுறல்.

## விருச்சிகம்

(விசாகம் 4-ம் பாதம் முதல், அனு ஷம் கேட்டை முடிய)

ராகுவினுல் கருத்து வேறுபாடுகள்; சனியினுல் பண நஷ்டம் அல்லது மதிப்புக் கெடல்; குருவினுல் பண வரவு, வெற்றி அல்லது தானிய வகை கள் கிடைக்கப்பெறல் அல்லது மக்கட் பேறு; செவ்வாயினுல் உடல் நலம் கெடல் அல்லது மதிப்புக் கெடல் அல்லது தன் பிள்ளைகள் அல்லது பெண்களால் கவலைகளுக்குள்ளாதல்; புதனுல் தன் பிள்ளைகள் அல்லது மனைவி யுடன் கருத்து வேறுபாடு கொளல்; சூரியனுல் மாதத்தின் முதல் 15 நாட்களின்போது உடல் நலம் கெடல் அல்லது எதிரிகளால் கவலைக் குள்ளாதல் ஆனுல் இறுதியில் உடல் நலம் மேன்மையும் வெற்றியும்.

## தனுசு

(மூலம், பூராடம், உத்திராடம் முதல் பாதம் முடிய)

ராகுவினுல் தீய நடவடிக்கைகளை மேற்கொளல். சனியினுல் உடல் நலம் கெடல் அல்லது கருத்து வேறுபாடுகள் அல்லது தீய நடவடிக்கைகளுக் குள்ளாதல்; குருவினுல் உடல் நலம் கெடல் அல்லது பிரயாணம்; செவ்வா யினுல் தீய நட்புறவினுல் துன்பங்களுக் குள்ளாதல் அல்லது உடல் நலம் கெடல்; புதனுல் குடும்பத்தில் மகிழ்ச்சி; சுக்ரனுல் பண வரவு அல்லது எதிரிகளால் கவலைக்குள்ளாதல்.

## மகரம்

(உத்திராடம் 2-ம் பாதம் முதல, திருவோணம், அவிட்டம் 2-ம் பாதம் முடிய)

ராகுவினுல் கவலைகள்; சனியினுல் உற்றூர் உறவினருடன் பிரிவு; குரு வினுல் பண வரவு மற்றும் கேளிக்கை களில் ஈடுபடுதல்; செவ்வாயினுல் தவ றுன வழியில் அல்லது பிள்ளைகள் மூலம் பொருள் கிடைக்கப் பெறல்; புதனுல் நண்பர்கள் ஆனுல் தன் னுடைய தவறுன நடவடிக்கையின் காரணமாகவோ அல்லது எதிரி களாலோ அலுவலகக் கவலைகளுக் குள்ளாதல்; சுக்ரனுல் பண வரவு அல்லது தானிய வகைகள் கிடைக்கப் பெறல் அல்லது மதிப்புயர்தல், வெற்றி, புதிய ஆடை ஆபரணங்கள் அல்லது மக்கட்பேறு; சூரியனுல் மாதத்தின் முதல் 15 நாட்கள் வரை பண வரவு, வெற்றி அல்லது பதவி உயர்வு ஆனுல் இறுதியில் உடல் நலம் கெடல்.

## கும்பம்

(அவிட்டம் 3-ம் பாதம் முதல், சதை யம், பூரட்டாதி 3-ம் பாதம் முடிய)

ராகுவினுல் கவலைகள்; சனியினுல் பிரயாணம்; குருவினுல் மனயமைதி பறிபோதல்; செவ்வாயினுல் கருத்து வேறுபாடுகளினுலோ அல்லது எதிரி களினுலோ அல்லது உடல் நலம் கெடுவதாலோ அல்லது வீட்டில் திருடு போவதாலோ அலுவலகக் கவலை களுக்குள்ளாதல்; புதனுல் இகழ்ச்சிக் குள்ளாதல்; சுக்ரனுல் கேளிக்கை களில் ஈடுபடல் அல்லது பண வரவு அல்லது மதிப்புயர்தல் அல்லது தானிய வகைகள் கிடைக்கப் பெறல் அல்லதுமக்கட்பேறு; சூரியனுல் மாதத் தின் முதல் 15 நாட்களின்போது பண நஷ்டம் அல்லது கண் சம்பந்தப் பட்ட நோயினுல் அவதியுறல் அல்லது ஏமாற்றப்படல் ஆனுல் இறுதியில் பண வரவு அல்லது பதவி உயர்வு கிடைக்கப் பெறல்;

## மீனம்

(பூரட்டாதி 4-ம் பாதம் முதல், உத்தி ரட்டாதி, ரேவதி முடிய)

ராகுவினுல் பண வரவு; சனியினுல் உடல் நல மேன்மை, வெற்றி; குரு வினுல் பண வரவு, புதிய ஆடை ஆபரணங்கள் அல்லது வாகன வாய்ப்பு அல்லது மக்கட்பேறு அல்லது வீடு வாய்ப்பு; செவ்வாயினுல் உடல் நலம் கெடல்; புதனுல் தவறுன யோசனைகளைக் கேட்டதனுல் அல்லது எதிரிகளின் திறமையினுல் பண நஷ்டம்; சுக்ரனுல் மாதத்தின் 17-ம் தேதி வரை எந்தவித நன்மை தீமை யும் ஏற்படாது ஆனுல் இறுதியில் மகிழ்ச்சி மற்றும் கேளிக்கைகளில் ஈடு படுதல்; சூரியனுல் மாதத்தின் முதல் 15 நாட்களின்போது பண நஷ்டம் அல்லது வயிற்றுக் கோளாறினுல் அவதியுறல் அல்லது பிரயாணம். ஆனுல் இறுதி நாட்களின்போது பண நஷ்டம் அல்லது ஏமாற்றப்படல் அல்லது கண் சம்பந்தப்பட்ட நோயி னுல் அவதியுறல்.

---

# வருந்துகிறோம்

திருப்பதியில் ஸ்ரீ வேங்கடேஸ்வரா கீழ்த்திசை ஆராய்ச்சி நிறுவனத்தில் பல ஆண்டுகள் பணிபுரிந்து, அது போது தாள்ளபாக்க அன்னமாச்சார்யாவின் கீர்த்தனைகளை தொகுத்து, பலவற்றிற்கு பண்ணமைத்தும் கொடுத் தவர் ஸ்ரீ தாள்ளபள்ளி அனந்தகிருஷ்ண சர்மா அவர்கள். இறுதிக் காலத்தில் நோய் வாய்ப்பட்டு தனது 87வது வயதில் பெங்களூரில் 11-3-79 அன்று காலமானுர். அவருடைய பிரிவு தெலுங்கு இலக்கிய உலகிற்கு ஒரு மாபெரும் இழப்பாகும். அன்னுரின் குடும்பத்தாருக்கு ‘ஸப்தகிரி’ தனது ஆழ்ந்த அனுதாபங்களைத் தெரிவித்துக் கொள்கிறது. அவர் இறப்பதற்குச் சில நேரங்களுக்கு முன்புதான், அவருடைய உடல்நிலையை கவனத்திற் கொண்டு, தி. தி. தேவஸ்தானத்தின் சார்பில் செயலாட்சித் தலைவர் திரு. பி. வி. ஆர். கே. பிரஸாத் அவர்கள், அன்னுரின் இல்லத்திற்குச் சென்று அவருக்கு ''தி. தி. தேவஸ்தான ஆஸ்தான சங்கீத சாகித்ய வித்வான்'' எனும் பட்டம் அளித்து கௌரவித்தார். அவருடைய மறைவு ஒட்டி, திருப்பதியில் 20-2-79 அன்று ஸ்ரீஅன்னமாச்சார்யா கலாமந்திரத்தில் இரங்கற் கூட்டம் ஒன்று நடைபெற்றது.

---

EDITED AND PUBLISHED ON BEHALF OF THE T. T. DEVASTHANAMS BY K. SUBBA RAO, M.A. AND PRINTED AT T.T.D. PRESS BY M. VIJAYAKUMAR REDDY, MANAGER, T. T. D. PRESS, TIRUPATI 517501

அண்மையில் திருப்பதியில் தி. தி. தேவஸ்தானத்தாரின் ஆதரவில், 3வது கூடைப்பந் தாட்டப் போட்டி நான்கு நாட்கள் நடைபெற்றது.



வெற்றிபெற்ற ஹைதராபாத் ஆர்டிலரி சென்டர் அணித் தலைவா, தி.தி.தே. செயற் பொறியாளர் திரு. இ. ரங்கராஜு அவர்களிடமிருந்து தேவஸ்தான சுழற்கோப்பையினைப் பெறுகின்றார்.

கூடைப்பந்தாட்டப்போட்டியின் இறுதி ஆட்டம் மின் ஒளி வெள்ளத்தில் நடைபெற்றபோது.

Regd. No. H/TRP/12 தனிப்பிரதி 50 காசு

நாகலாபுரத்திற்கு.... ....வருகை புரியுங்கள்!



# ஸ்ரீ வேதவல்லி சமேத ஸ்ரீ வேதநாராயண சுவாமி கோயில் பிரம்மோற்சவம்

உற்சவ விவரங்கள்

| தேதி | கிழமை | பகல் உற்சவங்கள் | இரவு உற்சவங்கள் |
|---|---|---|---|
| 11—4—79 | புதன் | — | சேனுபதி உற்சவம், அங்குரார்ப்பணம் |
| 12—4—79 | வியாழன் | திருச்சி உற்சவம், துவஜாரோஹணம் | பெரிய சேஷ வாஹனம் |
| 13—4—79 | வெள்ளி | சிறிய சேஷ வாஹனம் | ஹம்ஸ வாஹனம் |
| 14—4—79 | சனி | ஸிம்ஹ வாஹனம் | முத்துப்பந்தல் வாஹனம் |
| 15—4—79 | ஞாயிறு | கல்பவிருக்ஷ வாஹனம் | சர்வபூபால வாஹனம் |
| 16—4—79 | திங்கள | பல்லக்கில் மோகினி அவதாரம் | கருட வாஹனம |
| 17—4—79 | செவ்வாய் | ஹனுமந்த வாஹனம [மாலை-வசநதோற்சவம்] | கஜ வாஹனம |
| 18—4—79 | புதன் | ஸூர்யப்பிரபை வாஹனம் | சநதிரப் பிரபை வாஹனம் |
| 19—4—79 | வியாழன் | ரதோற்சவம | குதிரை வாஹனம |
| 20—4—79 | வெள்ளி | பல்லக்கு உறசவம், தீர்த்தவாரி அவப்பிரதோறசவம் | திருச்சியில் துவஜாவரோஹணம் |

இவ்விழா நாடகளின போது மாலை நேரங்களில ஊஞ்சல் சேவை நடைபெறும்.